# ترجمة كتاب (الايمان)

## حقيقته - علامته - ثمراته

تأليف الدكتور
عبد الله بن محمد المطلق

ترجمة
محمد الياس آدم

# இறை நம்பிக்கையின்

## உண்மைநிலையும்

## அறிகுறிகளும்

## நற்பலன்களும்

ஆசிரியர்

கலாநிதி அப்துல்லாஹ் இப்னு முஹம்மத் அல் முத்லக்

தமிழில்

ஏ.எல். முஹம்மது இல்யாஸ் (நளீமி)

تاميلي

المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بسلطانة
تحت إشراف وزارة الشؤون الإسلامية والأوقاف والدعوة والإرشاد
THE COOPERATIVE OFFICE FOR CALL & FOREIGNERS GUIDANCE AT SULTANAH

# இறை நம்பிக்கையின்

## உண்மைநிலையும்
## அறிகுறிகளும்
## நற்பயன்களும்

அறபு மூலம்:

கலாநிதி அஷ்ஷெய்க் அப்துல்லாஹ் முஹம்மத் அல் முத்லக்

தமிழில்:

ஏ.எல். முஹம்மது இல்யாஸ் (நளீமி)

வெளியீடு:
இஸ்லாமியப் பிரச்சாரப் பணியகம்,
அல் - ரவ்தா சனசமூகப் பிரிவு,
P.O. BOX: 87299, RIYADH - 11642,
SAUDI ARABIA.
Tel: 4918051 - Fax: 4918051

تم بعون الله وتوفيقه ترجمة وأصدار هذا الكتاب

**بالمكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بحـي الروضـــــة**

**تحت اشراف وزارة الشؤون الإسلاميـة والأوقاف والدعوة والإرشاد**

الرياض ١١٦٤٢ ص.ب ٨٧٢٩٩

هاتف ٤٩١٨٠٥١ فاكس ٤٩٧٠٥٦١

# இறைநம்பிக்கையின்

உண்மைநிலையும் - அறிகுறிகளும் - நற்பயன்களும்

அறபு மூலம்:

*கலாநிதி அஷ்ஷெய்க் அப்துல்லாஹ் முஹம்மத் அல் முத்லக்*

தமிழில்:

*ஏ.எல். முஹம்மது இல்யாஸ் (நளீமி)*


*வெளியீடு:*

*இஸ்லாமியப் பிரச்சாரப் பணியகம்,*

*அல் - ரவ்தா சனசமூகப் பிரிவு,*

**P.O. BOX: 87299, RIYADH - 11642,**
**SAUDI ARABIA.**
**Tel: 4918051 - Fax: 4918051**

# நூலாசிரியரின் முன்னுரை

அகிலத்தின் அதிபதியான அல்லாஹ்வுக்கே புகழனைத்தும். நபிமார்களிலும், இறைத்தூதர்களிலும் சிறந்தவரான முஹம்மத் (ஸல்) அவர்கள் மீதும், அவர்களது தோழர்கள், வழித்தோன்றல்கள் அனைவர் மீதும் ஸலவாத்தும், ஸலாமும் உண்டாவதாக.

இஸ்லாமிய சகோதரனே, அல்குர்ஆனின் கீழ்வரும் வார்த்தைகளை ஆழமாக சிந்தித்துப் பார்ப்பாயாக. அல்லாஹ், இந்தப் புனித வேதத்தை மக்களுக்கு ஒளியாகவும், வழிகாட்டியாகவும், உடல் உளரீதியான நோய்களுக்கு அருமருந்தாகவும், அறியாமை எனும் இருளிலிருந்து, இறைவிசுவாசம் (ஈமான்) எனும் ஒளியின்பால் மனிதர்களை வழிநடாத்தும் ஒளி விளக்காகவும் அருளியுள்ளதை நீ பார்க்கவில்லையா! இந்த அருள் மறையை ஆழமாக நோக்குவதன் மூலமே, அதிலிருந்து எமக்குப் பயன்பெற முடியும். கீழ்வரும் மறை வசனத்தைச் சற்று ஊன்றிப் படித்துப்பார்.

«يَـٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوا۟ ٱسْتَجِيبُوا۟ لِلَّهِ وَلِلرَّسُولِ إِذَا دَعَاكُمْ لِمَا يُحْيِيكُمْ
وَٱعْلَمُوٓا۟ أَنَّ ٱللَّهَ يَحُولُ بَيْنَ ٱلْمَرْءِ وَقَلْبِهِۦ وَأَنَّهُۥٓ إِلَيْهِ تُحْشَرُونَ »

இதன் பொருள்:

*"விசுவாசிகளே! உங்களுக்கு வாழ்வு அளிக்கக் கூடியதன் பக்கம் இறைதூதர் உங்களை அழைக்கும்போது அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் பதில் கூறுங்கள். நிச்சயமாக, அல்லாஹ் மனிதனையும், அவனது உள்ளத்தையும் சூழ்ந்து நிற்கிறான் என்பதையும் நிச்சயமாக, அவனிடமே நீங்கள் ஒன்று திரட்டப்படுவீர்கள் என்பதையும் அறிந்து கொள்ளுங்கள்."*

*அன்பால் (8:24)*

இந்த அல் குர்ஆன் வசனம், நாயகம் (ஸல்) அவர்கள் கொண்டு வந்த வாழ்க்கைதான் உண்மையான, வளம் பொருந்திய, ஈருலகிலும் பயனளிக்கக் கூடிய வாழ்வாகும் என்பதை உறுதிப்படுத்துகிறது. எனவே, நபிகளாரின் இந்த உண்மை வழிமுறையைப் புறக்கணித்து வாழ்பவன் பாதையில் உயிரோடு நடந்து சென்றாலும், சுறுசுறுப்பாக நாளாந்த நடவடிக்கைகளில் ஈடுபட்டாலும் அவன் மரணித்த ஒருவனாகவே கருதப்படுவான்.

கீழ் வரும் இறைவசனம் இந்த உண்மையைத் தெளிவுபடுத்துகின்றது:

"أَوَمَن كَانَ مَيْتًا فَأَحْيَيْنَٰهُ وَجَعَلْنَا لَهُۥ نُورًا يَمْشِى بِهِۦ
فِى ٱلنَّاسِ كَمَن مَّثَلُهُۥ فِى ٱلظُّلُمَٰتِ لَيْسَ بِخَارِجٍ مِّنْهَا"

இதன் பொருள்:

*"இறந்துவிட்டிருந்த ஒருவனுக்கு நாம் உயிர் கொடுத்தோம். பின்னர் அவனுக்கு ஓர் ஒளியையும் வழங்கினோம். அதன் உதவியால் அவன் மக்களிடையே நடமாடுகின்றான். இப்படிப்பட்டவனும் இருள்களில் சிக்கி எவ்விதத்திலும் அவற்றிலிருந்து வெளியேற முடியாமலிருப்பவனும் சமம் ஆவார்களா?"*

*அன்ஆம் (6 : 122)*

இஸ்லாமிய சகோதரனே!

நாயகம் (ஸல்) அவர்கள் கொண்டுவந்த வாழ்வின் மூலமந்திரம், ஓரிறைவனை விசுவாசிப்பதாகும். இந்த விசுவாசத்தின் பக்கம்தான் அவர்கள் மக்களுக்கு அழைப்பு விடுத்தார்கள். "அறியாமை" எனும் இருளிலிருந்து "இஸ்லாம்" எனும் ஒளியின்பால் முஸ்லிம்களை அவர்கள் வழிநடாத்தியதும் இந்த இறை விசுவாசத்தின் மூலம்தான். இச்சிறிய கைநூலில் ஈமானைப் (இறைவிசுவாசத்தைப்) பற்றியும், ஈமானின் அறிகுறிகள், அதன் உண்மைநிலை, அதன் விளைவுகள் பற்றியும், இந்த ஈமானின் மூலம் உளஒளி பெற்றவர்களின் சில முன்மாதிரிகளையும் சுருக்கமாகக் குறிப்பிட இருக்கின்றோம். நேர்வழியின் பக்கம் அழைப்பு விடுக்கப்பட்டபோது, அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் இவர்கள் (உளஒளி பெற்றவர்கள்) எவ்விதத் தயக்கமுமின்றி உடன் பதிலளிப்பவர்களாக இருந்து வந்தார்கள்.

# மொழி பெயர்த்தோனின் உரை

மனித இனத்தைப் படைத்துப் பரிபாலிக்கக் கூடிய ஒரே இறைவனான அல்லாஹ்வுக்கே புகழனைத்தும். இருளிலும், அஞ்ஞானத்திலும் மூழ்கியிருந்த மனிதர்களுக்கு அறிவூட்டி, நல்வழிகாட்டி அவர்களை ஒளியின்பால் கொண்டு வந்த அல்லாஹ்வின் இறுதித் தூதரான முஹம்மத் (ஸல்) அவர்கள் மீதும், அவர்களை இறுதித் தீர்ப்புநாள் வரை பின்பற்றக் கூடிய அனைத்து முஃமீன்கள் மீதும் சலவாத்தும், சலாமும் என்றென்றும் உண்டாவதாக!

அல்லாஹ்தஆலா இவ்வுலகை மனிதர்களுக்கு சோதனைக்களமாக ஆக்கி, பலதரப்பட்ட படித்தரங்களையும், மேடு பள்ளங்களையும் அவர்களது வாழ்வில் ஏற்படுத்தியுள்ளான். மகிழ்ச்சி, துக்கம், ஏழ்மை, செல்வநிலை, பலயீனம், வலிமை, சுகயீனம், உடற்சுகம் போன்ற நிலைமைகளை மனித வாழ்வில் அவ்வப்போது தோன்றச் செய்து அவர்களைப் பரீட்சிக்கின்றான். எனவே, மனிதர்களுக்கு உபதேசம் செய்யக் கூடியவர்கள், அவர்களுக்கு ஏற்படும் இவ்வாறான அனைத்து நிலைமைகளையும் அவசியம் கவனத்திற் கொள்ள வேண்டும். அப்போதுதான் தான் முன்வைக்கும் உபதேசம் பயன்தரக் கூடியதாக இருக்கும்.

மேலும், தட்டுத்தடுமாறிய நிலையிலிருந்த மனித இனத்திற்கு, அல்லாஹ்தஆலா இந்த இஸ்லாத்தின் மூலம் நல்வழிகாட்டி அதன் மூலம் அவர்களது உள்ளங்களில் அமைதியையும், வாழ்வில் சுபீட்சத்தையும் ஏற்படுத்தியுள்ளான். அல்லாஹ் மனிதர்களுக்கு அருளிய இந்த உயர் அருளுக்காக, மனிதர்கள் அவனுக்கு நன்றிக் கடமைப்பட்டுள்ளார்கள். அவ்வாறே அல்லாஹ்விடமிருந்து தனக்குக் கிடைத்த அருளில் (இஸ்லாத்தில்) நிலைத்திருக்கவும் வேண்டும். அப்போதுதான் அவனுக்கு அல்லாஹ்வுடைய பாதுகாப்பும், உதவியும் கிட்டும். உண்மை

விசுவாசிகளுக்கு அல்லாஹ் வாக்களித்துள்ளதைச் சிறிது செவிமடுங்கள்:

***"(உண்மை) இறைவிசுவாசிகளுக்கு உதவி செய்வது எம்மீது கடமையாக ஆகிவிட்டது."***

*அர்ரூம் (30 : 47)*

எனவே, இஸ்லாமியக் கடமைகளை (கிரியைகளை) எப்போதும், எந்த நிலையிலும் "அல்லாஹ்வுக்காகவே நிறைவேற்றுகின்றேன்" என்ற தூய எண்ணத்துடன் செய்துவர வேண்டும். மரணத்தின் பின்னாலுள்ள வாழ்விற்காக இவ்வுலகில் இருக்கும்போதே நற்கருமங்களை அதிகமதிகமாக சம்பாதித்துக் கொள்ள வேண்டும்.

மேலும், உலக வாழ்வில் தனக்கு எந்தச் சோதனை ஏற்பட்டாலும் நிலைகுலைந்து விடாமல் உறுதியாக இருக்க வேண்டும்.

இவ்வாறான, எமக்குப் பயன்தரக்கூடிய நல்ல பல விடயங்களையும், உபதேசங்களையும் இக்கைநூல் உள்ளடக்கியிருப்பதை வாசகர்களாகிய நீங்கள் கண்டுகொள்வீர்கள். இஸ்லாத்தில் உள்ள ஒருவன் அல்லாஹ்வையும், அவனது தூதரையும் எந்தளவு நேசிக்க வேண்டும், அந்த நேசம் யாருக்காக அமைய வேண்டும், இவ்வுலகை எவ்வாறு கணிக்க வேண்டும், மறுஉலகை எந்தளவு மதிக்க வேண்டும், நற்காரியங்களின்பால் ஆர்வமும், தீங்குகளின்பால் வெறுப்பும் ஒரு முஃமீனிடம் எந்தளவு இருக்க வேண்டும் என்பவற்றையெல்லாம் இந்நூலாசிரியர் தகுந்த ஆதாரங்களுடன், தனக்கே உரிய இலகு நடையில் தெளிவுபடுத்துகின்றார். அவ்வாறே ஈமானின் (உறுதியான இறைநம்பிக்கையின்) உண்மையான நல்விளைவுகளையும் இந்நூலாசிரியர் அழகுற எடுத்துக் காட்டுவதையும், வாசகர்கள் இந்நூலின் இறுதிப் பகுதியில் கண்டுகொள்வார்கள்.

இதுதான் எனது முதல் மொழியாக்கம் என்பதால், ஆங்காங்கே சிற்சில வழி நழுவல்கள் ஏற்பட்டிருக்கலாம். அவ்வாறிருப்பின் வாசகர்களாகிய நீங்கள் அன்புகூர்ந்து அதுபற்றி எனக்கு அறியத் தருவீர்களாயின் மிக்க நன்றியுடையவனாக இருப்பேன். உண்மையில் அறபு மொழிபோன்ற கருத்துச் செறிவு நிறைந்த ஒரு மொழியிலிருந்து பிறமொழியொன்றிற்கு மொழியாக்கம் செய்யும்போது ஆங்காங்கே சிற்சில மொழிமாற்றங்கள் ஏற்படுவது இயல்பான ஒரு விடயமாகும். எனினும், மூலநூலின் சுவையை முழுமையாக இல்லாவிட்டாலும் முடிந்தளவு வாசகர்களுக்குத் தருவதற்கு இந்நூலில் முயன்றுள்ளேன்.

இறுதியாக, ஆங்காங்கே சில திருத்த ஆலோசனைகளைக் கூறி உதவிய சகோதர நண்பர்களுக்கும், இம்மொழியாக்கத்தைத் திருப்திகரமாகவும், அவசரமாகவும் செய்து முடிப்பதற்கு என்னை ஊக்குவித்த அல் - ரவ்தாப் பகுதி (Rawda) இஸ்லாமிய வழிகாட்டல் நிலையப் பணிப்பாளர் அஷ் - ஷெய்க் ஸாலிஹ் அவர்களுக்கும், இந்நூலை அழகிய முறையில் அச்சிட்டுத் தந்த இலங்கையைச் சேர்ந்த Mansco Printing Consultancy அச்சகத்தாருக்கும் எனது இதயங்கனிந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

வஆஹிரு தஃவானா அனில் ஹம்துலில்லாஹி ரப்பில் ஆலமீன்.

என்றும் இறையருளை நாடி நிற்கும்,

***ஏ.எல். எம். இல்யாஸ் (நளீமி)***

# பொருளடக்கம்

# ஈமானின் (இறை நம்பிக்கையின்) உண்மை நிலை:

## 1. ஈமான் (இறை விசுவாசம்) என்றால் என்ன?

ஜிப்ரீல் (அலை) அவர்கள், ஒரு முறை நபிகளாரிடத்தில் ஒரு நாட்டுப்புற அரபியின் உருவில் வந்து அவர்களிடத்தில் ஈமானைப்பற்றி வினவினார். அதற்கு விடையாக நாயகம் (ஸல்) அவர்கள்,

***''அல்லாஹ்வைக் கொண்டும், அவனது தூதர்களான மலக்குகளைக் கொண்டும், அவனது பரிசுத்த வேதங்களைக் கொண்டும், அவனது தூதர்களைக் (நபிமார்களைக்) கொண்டும் இறுதித் தீர்ப்பு நாளை கொண்டும், நன்மை தீமைகள் யாவும் அவனது தீர்மானத்தின் படியே நடைபெறுமென்றும் விசுவாசம் கொள்வதாகும்''***

*- ஆதாரம் : முஸ்லிம்*

என்று பதிலளித்தார்கள்.

அரபு மொழியில் ''ஈமான்'' என்பது ஒன்றை உண்மைப்படுத்துவதாகும். மேற்குறிப்பிட்ட ஹதீஸின் உண்மைக் கருத்து யாதெனில், உலகமனைத்தினதும் ஆட்சிக்கு உரியவனான அல்லாஹ் ஒருவனுக்கு மாத்திரமே இபாதத் (வணக்கவழிபாடுகள்) செய்ய வேண்டும் என்பதனை ஒருவன் பரிபூரணமாக ஏற்றுக் கொண்டு, அதனை உண்மைப்படுத்துவதாகும். அத்தோடு அவன் எவ்விதக் குறையுமற்றவன், அனைத்திலும் பரிபூரணமானவன் என்றும் உண்மைப்படுத்த வேண்டும். அவ்வாறே மலக்குகள் என்போர், கண்ணியத்திற்குரிய இறையடியார்கள். அல்லாஹ்வின் கட்டளைகளுக்கு ஒருபோதும் அவர்கள் மாறு செய்யமாட்டார்கள். அல்லாஹ்வின் ஏவல்களை உடனே நிறைவேற்றுவார்கள். அவர்களைப் பல வகுப்பினர்களாகப் பிரிக்கலாம்.

**"அவர்களில், அர்ஷைச் (ஆட்சிபீடம்) சுமப்பவர்கள், குருபிய்யூன்கள் (அர்ஷைச் சூழவுள்ள மிகவும் சிறப்புப்பெற்ற மலக்குகள்), சதாவும் வணக்கத்தில் நிலைத்திருக்கும் ஏழு வானங்களிலுமுள்ள மலக்குகள், சுவர்க்கத்திற்குப் பொறுப்பாக நியமிக்கப்பட்ட மலக்குகள், நரகத்திற்குப் பொறுப்பாக நியமிக்கப்பட்டவர்கள், வஹி எனும் இறைதூதிற்குப் பொறுப்பாக உள்ளவர்கள், மரணத்திற்குப் பொறுப்பாக உள்ளவர்கள், "சூர்" எனும் ஊது குழலிற்குப் பொறுப்பாக உள்ளவர்கள். இறை கட்டளைகளின் பிரகாரம் பிரபஞ்சத்தின் விடயங்களுக்குப் பொறுப்பாக உள்ளவர்கள் போன்றோர் குறிப்பிடத்தக்கவர்.**

**இதனைக் குறித்து அல்லாஹ் அல்குர்ஆனில் இவ்வாறு குறிப்பிடுகின்றான்.**

«فَالْمُدَبِّرَاتِ أَمْرًا»

***"(இறைகட்டளைப்படி) விவகாரங்களை முறைப்படி நிர்வகித்து வருகின்றவர்கள் மீதும் சத்தியமாக."***

***அந் - நாஸிஆத் (79 : 5)***

மேலும், மழைக்குப் பொறுப்பாக நியமிக்கப்பட்ட மலக்குகள், காற்றிற்குப் பொறுப்பானவர்கள், கர்ப்பவறைகளில் ரூஹை (உயிர்களை) ஊதிவிடுவதற்கும் பொறுப்பாக உள்ளவர்கள், தாவரங்களை முளைப்பிப்ப தற்குப் பொறுப்பாக உள்ளவர்கள், மனிதனோடு சேர்ந்திருந்து கொண்டு, அவனது செயல்களைக் கண்காணிப்பதற்குப் பொறுப்பாக உள்ளவர்கள், மலைகளுக்குப் பொறுப்பாக உள்ளவர்கள், பூமியில் ஆங்காங்கே இறைவனை ஞாபகப்படுத்தப்படும் சபைகளுக்கு சமூகம் தரும் வகையில் புவியில் திரிந்து கொண்டிருக்கும் மலக்குகள், இவர்கள் பற்றி ஆதாரபூர்வமான ஹதீஸ்களில் அறிவிக்கப்பட்டுள்ளது.

அடுத்ததாக, அல்குர்ஆனில் குறிப்பிடப்பட்டுள்ளது போன்று அல்லாஹ்வால் இறக்கப்பட்ட அனைத்து வேதங்களைப் பற்றியும் விசுவாசம் கொள்ள வேண்டும். இவற்றில் தௌறாத், இன்ஜீல், ஸபூர், இப்றாஹீம் நபியின் ஸுஹுபுகள் (இறை கட்டளைகள்) மூஸா நபியின் ஸுஹுபுகள் (இறை கட்டளைகள்) போன்றவற்றையும், இன்னும் பெயர் குறிப்பிடப்படாத இறை வேதங்களையும் நம்பவேண்டும். இவற்றில் தற்போதுள்ள சில வேதநூல்களில் ஏற்பட்டுள்ள திரிபுகள், இடைச் செருகல்கள் போன்றவற்றையும் இங்கு அவசியம் கவனிக்கவேண்டும்.

அவ்வாறே அல்குர்ஆனுக்கு முன்னர் இருந்துவந்த வேதங்களைத் தற்போதுள்ளவர்கள் பின்பற்றுவதைத் தவிர்த்து, இறுதியாக உலகமனைத்திற்கும் பொதுவாக வந்த அல்குர்ஆன் ஒன்றையே பின்பற்றி அதன்படி செயல்புரிய வேண்டும். இது, மனிதர்கள், ஜின்கள் இருபாலார் மீதும் உள்ள ஒரு பொதுக் கடமையாகும்.

நான்காவதாக, அல்லாஹ்வால் அனுப்பப்பட்ட அனைத்து தூதர்கள் பற்றியும் நம்பிக்கை கொள்ளவேண்டும். இத் தூதர்களில் இருபத்தைந்து பேர்கள் பற்றி அல்குர்ஆனில் குறிப்பிடப்பட்டுள்ளது. இறைத் தூதர்களின் எண்ணிக்கை முந்நூற்றுப் பதினைந்து ஆகும் என்ற கருத்து ஒரு ஹதீஸில் வருவதாக இமாம் இப்னு கஸீர் அவர்கள் ''அல் பிதாயா வந்நிஹாயா'' என்ற நூலில் (பக்கம் : 152/2) இல் குறிப்பிடுகின்றார். எனினும் இந்த ஹதீஸ் பலவீனமான ஹதீஸாகும்.

மேலும், ஒவ்வொரு சமுதாயத்தினர் மத்தியிலும் தவ்ஹீதை (ஓரிறைக் கொள்கை) எடுத்துச் சொல்வதற்காக ஒரு தூதரை அனுப்பியதாகவும், தூதர் அனுப்பப்படாத எந்தவொரு சமுதாயமும் உலகில் இல்லை என்றும் அல்லாஹ் தஆலா குர்ஆனில் குறிப்பிடுகின்றான். இதுபற்றி அல்குர்ஆன் இவ்வாறு குறிப்பிடுகின்றது.

« وَإِن مِّنْ أُمَّةٍ إِلَّا خَلَا فِيهَا نَذِيرٌ »

*''மேலும், எச்சரிக்கை செய்பவர் எவரும் வருகை தராமல் எந்தவொரு சமுதாயமும் இருந்ததில்லை.''*

*அல் - பாதிர் (35 : 24 )*

அடுத்து, நன்மை தீமை பற்றி தீர விசாரித்துக் கூலி வழங்கப்படும் இறுதித் தீர்ப்பு நாளைப் பற்றி நம்பிக்கை கொள்ளவேண்டும். அந்த நாளன்று மனிதர்கள், தம் மண்ணறைகளிலிருந்து உயிர் கொடுத்து எழுப்பப்படுவார்கள். அல்லாஹ்வின் சந்நிதானத்தில் நிறுத்தப்படுவார்கள். மேலும், அந்நாளையில் தற்போதுள்ள புவியின் நிலை மாற்றப்பட்டு வேறொரு அமைப்பில் இப்புவியும் வானங்களும் கொண்டுவரப்படும். அவ்வேளையில், அனைத்தையும் அடக்கியாளும் அல்லாஹ் ஒருவனிடத்தில் அனைவரும் ஒன்று சேர்வார்கள். உலகில் இருந்தபோது நற்கிரியைகளில் ஈடுபட்டவர்கள், அந்நாளில் இறையருள் பெற்ற நபிமார்களுடனும், உண்மையாளர்களுடனும், உயிர்த்தியாகிகளுடனும், ஸாலிஹீன்களுடனும் (நல்லடியார்கள்) ஒன்றாக இருப்பார்கள். இவர்களுடன்

சேர்ந்திருப்பதால் இத்தகையவர்களுக்கு நற்பலன்களைத் தவிர வேறெதுவும் கிடைப்பதில்லை.

மேற்குறிப்பிட்டதற்கு மாற்றமாக, எவரது செயல் ஏடுகள் தாம் செய்த தீவினைகளாலும், இணைவைப்பினாலும் நிரம்பியிருக்குமோ, அவர் அந்நாளில் நரகிலே தீயவர்களுடனும், வழிகேடர்களுடனும் சேர்ந்திருப்பார். அந்நரகின் வெப்பமோ மிகவும் கொடூரமானது. அதன் ஆழம் மிகவும் அதிகமானது. நெருப்பினாலான இரும்புச் சங்கிலிகளும், விலங்குகளும் அதில் நிறைந்திருக்கும். அதில் போடப்பட்டவர்கள் எவ்வளவுதான் கையேந்திப் பிரார்த்தித்து உதவி கோரினாலும் அவர்களுக்கு உதவி செய்ய யாருமிருக்க மாட்டார்கள்.

இறுதியாக, இப்பிரபஞ்சத்தினதும், அதில் வாழும் மனிதர்களினதும் அனைத்து விடயங்களையும், அவை நடைபெறுவதற்கு முன்னரே அல்லாஹ் அதுபற்றி அறிந்து வைத்துள்ளான் என்றும் நம்பிக்கை கொள்ள வேண்டும். அவற்றைத் தனது அறிவினடிப்படையில் ஏற்கனவே எழுதி வைத்துள்ளான். அவை உலகில் நடைபெற வேண்டுமென இறைவன் ஏற்கனவே நாட்டம் வைத்துள்ளான். ஏனெனில், இறைவன் உலகை ஒரு சோதனைக் களமாக ஆக்கியுள்ளான். தான் நாடாத எந்த ஒன்றும் உலகில் நடைபெறமாட்டாது. ஏனெனில் அவன்தான் மனித இனத்தையும், அவர்கள் செய்ய வேண்டிய அனைத்துக் கிரியைகளையும், மற்றும் பிரபஞ்ச வஸ்துக் களையும் படைத்தான். இவையனைத்திற்கும் பொறுப்பானவன் அவனே.

மனிதனுக்கு ஏற்படும் துன்பங்கள், கஸ்டங்கள் யாவும் அவனது (கெடு) செயல்களின் காரணமாக, இறைவனால் அவன் மீது விதிக்கப்பட்டவையாகும்.

இதுபற்றி அல்குர்ஆன் இவ்வாறு குறிப்பிடுகின்றது:

﴿ وَمَآ أَصَٰبَكُم مِّن مُّصِيبَةٍ فَبِمَا كَسَبَتْ أَيْدِيكُمْ وَيَعْفُوا۟ عَن كَثِيرٍ ﴾

*"எந்த ஒரு துன்பமானாலும், அது உங்கள் கைகள் தேடிக்கொண் டவை தான். மேலும், அவன் பெரும்பாலான பிழைகளை பொருட்ப டுத்தாமல் விட்டு விடுகின்றான்."*

*அஷ் - ஷூரா (42 : 30)*

இந்த வகையில் இறையடியார்களாகிய நாம் அவனது கத்ரைக் (ஏற்பாட்டை) கொண்டு பூரண திருப்தி கொள்வதோடு, முடிந்தளவு

நற்கிரியைகளைப் புரிவதில் ஈடுபடவேண்டும். ஒருவன் தனக்கு ஏற்படும் தீங்குகளைக் கொண்டு திருப்தியடைந்தாலும், இல்லாவிட்டாலும் அது எப்படியும் நடந்தே தீரும். அதனைத் தடுக்க இறைவனைத் தவிர வேறு யாராலும் முடியாது. அதுபற்றி ஒருவன் அதிருப்தியடைந்தால், அதற்குரிய கூலியை இழந்துவிடுவான். துன்பத்தின்போது நீ பொறுமையோடிருந்தால் அதற்கு உனக்குக் கூலி உண்டு. அதன் போது பொறுமையிழந்து, அதிருப்தி கொண்டால், கிடைக்க இருக்கும் நற்கூலி கிடைக்காது. இறை ஏற்பாட்டின் படி நடக்கவிருக்கும் ஒன்று எப்படியும் நடக்கும் என்பதில் சந்தேகமில்லை.

மேற்குறிப்பிடப்பட்ட விடயங்களைப் பற்றி நம்பிக்கை கொள்வதோடு மாத்திரம் நின்றுவிடாமல், அவற்றை நற்கிரியைகளின் மூலம் உண்மைப்ப டுத்த வேண்டும். ஈமான் என்பது உள்ளத்தினால் உண்மைப்படுத்தி, நாவினால் மொழிந்து, உறுப்புக்களின் மூலம் அதனை செயல்படுத்து வதாகும். நன்மை புரிவதன் மூலம் இந்த ஈமான் அதிகரிக்கும் அதே வேளை பாவமிழைப்பதன் மூலம் அது குறைவடையும். இறைவனைத் தினமும் தொழாதவனை (வணக்கம் செலுத்தாதவன்) உள்ளத்தில் ஈமானுள்ளவன் என்று கூற முடியாது. இது இஸ்லாமிய அறிஞர்களின் கருத்தாகும்.

இதுபற்றி அல்குர்ஆன் இவ்வாறு குறிப்பிடுகின்றது:

« فَإِن تَابُوا۟ وَأَقَامُوا۟ ٱلصَّلَوٰةَ وَءَاتَوُا۟ ٱلزَّكَوٰةَ فَإِخْوَٰنُكُمْ فِى ٱلدِّينِ »

*"எனினும் இவர்கள் பாவமீட்சிபெற்று, தொழுகையை நிலைநாட்டி, சகாத்தையும் கொடுத்தால் மார்க்கத்தில் இவர்கள் உங்கள் சகோதரர்களாவர்."*

*அத் - தவ்பா (9 : 11)*

சுவர்க்கவாசிகள், நரகவாசிகளைப் பார்த்து, "நீங்கள் எதற்காக நரகில் நுழைந்தீர்கள்" என்று கேட்கும் போது, அவர்கள் பின்வருமாறு பதில் அளிப்பார்கள் என்று அல்குர்ஆன் கூறுகின்றது.

« قَالُوا۟ لَمْ نَكُ مِنَ ٱلْمُصَلِّينَ ﴿٤٣﴾ وَلَمْ نَكُ نُطْعِمُ ٱلْمِسْكِينَ ﴿٤٤﴾
وَكُنَّا نَخُوضُ مَعَ ٱلْخَآئِضِينَ ﴿٤٥﴾ وَكُنَّا نُكَذِّبُ بِيَوْمِ ٱلدِّينِ »

*''அதற்கவர்கள், நாங்கள் தொழக்கூடியவர்களில் இருக்கவில்லை. நாம் ஏழைகளுக்கு உணவு அளிக்கவில்லை. மேலும், வீணான காரியங்களில் மூழ்கியிருந்தவர்களுடன் நாமும் இருந்தோம். (செயல்களுக்கு) கூலி வழங்கப்படும் இந்த நாளையும் நாம் பொய்ப்படுத்தினோம்.''*

*அல் - முத்தஸ்ஸிர் (74 : 43 - 46)*

சில சந்தர்ப்பங்களில், சிலர் ஒரு பெரும் பாவத்தில் தொடர்ந்து பிடிவாதமாக இருப்பதைப் பார்க்கலாம். அத்தகையவர்களிடம் நீ சென்று, அவர்களுக்கு உபதேசித்தால் அவர்கள் உன்னைப் பார்த்து, சகோதரனே, எனது உள்ளம் பொறாமை, வஞ்சகம் போன்ற கெட்ட குணங்களை விட்டும் தூய்மையானது. நபிகளார் (ஸல்) அவர்கள்கூட தனது மார்புப் பகுதியைக் காட்டி ''தக்வா (இறையச்சம்) இங்கேதான் உள்ளது'' என்று கூறியிருக்கின்றார்கள் என்று கூறுவார்கள். இத்தகையவர்கள் இந்த ஹதீஸை வைத்து, தான் ஒரு பூரண முஃமீன் (விசுவாசி) என்று அடித்துக் கூறுவார்கள். மேற்குறிப்பிட்டவாறு பெரும்பாவமொன்றில் பிடிவாதமாக இருப்பதால் தனக்கு எவ்வித தீங்கும் ஏற்படாது என்றும் கூறுவார்கள். உண்மையில் ஒருவர் பாவத்தில் இருந்து கொண்டு இவ்வாறு கூறுவது வெளிப்படையான தவறாகும். இது அவரது அறியாமையை வெளிக்காட்டுவதாகும். ஏனெனில் ஒருவனின் செயற்பாடுகள் (அமல்கள்) தான், அவனது உள்ளக்கிடக்கைகளின் வெளிப்பாடாகும்.

இந்த வகையில், தான், இறை நம்பிக்கையில் உறுதியானவன் என்றும் அல்லாஹ்வையும், அவனது தூதரையும் அதிகம் நேசிப்பதாகவும் ஒருவன் வாதாடினால் அந்த நம்பிக்கையும், இறைநேசமும் அவனது வணக்க வழிபாடுகளில் வெளிப்பட வேண்டும். இதற்கு மாற்றமாக, தன்னை ''இறைநேசன்'' என்று கூறிக்கொள்ளும் ஒருவனிடம் பாவங்களின் சின்னங்கள் வெளிப்படுமானால், அவனை உண்மையான இறைநேசன் என்று ஒருபோதும் கூறிவிட முடியாது.

இது பற்றி ஒரு கவிஞர் இவ்வாறு குறிப்பிடுகின்றார்:

இறைவனை நேசிக்கின்றேன் என்று கூறிக் கொண்டே, நீ அவனுக்கு மாறு செய்கின்றாய்!

நிச்சயமாக நீ இவ்வாறு செய்வது, நூதனமானதொரு விடயமாக இருக்கின்றது!

உனது இறைநேசம் தூய்மையானதாக இருப்பின், நீ உனதிறைவனை ஏற்று நடப்பாய்!

ஏனெனில், ஒருவரில் நேசம் வைப்பவன், எப்போதும் அவரைப் பின் தொடரக் கூடியவன்!

அதேவேளை இப்படிப்பட்டவனிடத்தில் ஈமானே இல்லை என்று நாம் கூறவில்லை. எனினும், பாவங்களில் மூழ்குவது இறைநிராகரிப்பிற்கு இட்டுச் செல்லும்.

ஓரிறைக் கொள்கையை ஏற்று ஒருவன், பெரும்பாவமொன்றில் தொடர்ந்து பிடிவாதமாக இருக்கும் நிலையில் மரணித்தால் அவன் இறுதிநாளில் இறை நாட்டத்திற்குட்பட்டு இருப்பான். அல்லாஹ் நாடினால் அவனை - மன்னித்துவிடுவான். அல்லது அவனது பாவத்திற்காக அவனை முதலில் தண்டித்துவிட்டு, பிறகு அவனுக்கு சுவர்க்கத்தை அளிப்பான்.

# ஈமானின் (இறை நம்பிக்கையின்) அறிகுறிகள்:

எந்த ஒரு பொருளாக அல்லது விடயமாக இருந்தாலும், அதனது தோற்றத்தை அல்லது அடையாளங்களை வைத்துத்தான் அதனை மக்கள் தெரிந்து கொள்வார்கள். அதுபோன்றுதான் ஒருவனது உள்ளத்தில் ஆழமாகப் பதிந்து, வெளி உறுப்புக்களினூடாக நல்லமல்களை வெளிப்படுத்தும் ஈமானுக்கும், அதனைத் தெரிந்து கொள்வதற்கான சில அடையாளங்கள் இருக்கின்றன. சூரியன் எவ்வாறு தன் பிரகாசமான ஒளிக் கதிர்கள் மூலம் தன்னைப் பிறருக்கு அறிமுகப்படுத்துகின்றதோ. அவ்வாறுதான் ஈமானும், அந்த ஈமானின் (இறைநம்பிக்கையின்) சில அடையாளங்களை அல்குர்ஆனும், இன்னும் சிலவற்றை நபிகளாரின் பொன் மொழிகளும் எமக்குத் தெளிவுபடுத்துகின்றன. அவற்றில் சிலவற்றைக் கீழே தருகிறோம்.

## *1. அல்லாஹ்வையும், அவனது தூதரையும் அதிகம் நேசித்தல்:*

அல்லாஹ்வும், அவனது தூதரும் அனைத்தைவிடவும் தன்னிடத்தில் நேசத்திற்குரியவர்களாக இருக்க வேண்டும். ஒருவனது அனைத்து விடயங்களிலும் இந்த நேசம் வெளிப்பட வேண்டும்.

நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

*"மூன்று விடயங்கள் ஒருவனிடத்தில் இருப்பின் அவன் ஈமானின் சுவையைக் கண்டு கொள்வான்:*

1. ஏனைய அனைத்தையும் விட அல்லாஹ்வும், அவனது தூதரும் அவனிடத்தில் உவப்பிற்குரியவர்களாக இருத்தல் வேண்டும்.

2. ஒரு மனிதரை நேசிப்பதாயின், அவனை அல்லாஹ்வுக்காகவே நேசிக்க வேண்டும்.

3. நரக நெருப்பில் போடப்படுவதை ஒருவன் எந்தளவு வெறுப்பானோ, அந்தளவு மீண்டும் இறைநிராகரிப்பிற்குத் திரும்புவதை வெறுக்க வேண்டும்."

*- புகாரி, முஸ்லிம்.*

ஒருமுறை உமர் (ரலி) அவர்கள் நபிகளாரிடம் வந்து. அல்லாஹ்வின் தூதரே, உலகில் அனைத்தை விடவும் நீங்கள் என்னிடத்தில் எனது - நேசத்திற்குரியவர்கள். ஆனால் என்னைத் தவிர, என்று கூறினார்கள். அப்போது நபியவர்கள் உமர் (ரலி) அவர்களை நோக்கி, உமரே, உம்மை விடவும், உம்மிடத்தில் நான் நேசத்திற்குரியவனாக இருக்க வேண்டும் என்று கூறினார்கள். மீண்டும் உமர் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர வர்களே, உம்மைத் தூதராக அனுப்பியவனின் மீது சத்தியமாக, நீங்கள் என்னிடத்தில், என்னை விடவும் அதிகம் நேசத்திற்குரியவர்கள், என்று கூறினார்கள். பின்னர் நபியவர்கள், "இப்போதுதான் உமது ஈமான் பூரண மாக உள்ளது" என உமரவர்களைப் பார்த்துக் கூறிவிட்டு, இந்த இறைநேசம் உமது செயல்களிலும் வெளிப்பட வேண்டும் என்றும் அவர்களிடத்தில் வேண்டினார்கள். இதனை வைத்தே "சில மனிதர்கள், தாம் அல்லாஹ்வை அதிகம் நேசிக்கின்றோம் என்று கூறுபவர்களாக இருந்து வருகின்றார்கள்" என்று அல்லாஹ் கூறுகின்றான்.

இறைநேசம் பற்றி அல்குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது:

« قُلْ إِن كُنتُمْ تُحِبُّونَ ٱللَّهَ فَٱتَّبِعُونِى يُحْبِبْكُمُ ٱللَّهُ

وَيَغْفِرْ لَكُمْ ذُنُوبَكُمْ ۗ وَٱللَّهُ غَفُورٌ رَّحِيمٌ »

*"(நபியே! மனிதர்களை நோக்கி) நீர் கூறும்: நீங்கள் மெய்யாகவே அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால், நீங்கள் என்னைப் பின்பற்றுங்கள். உங்களை அல்லாஹ் நேசிப்பான். உங்கள் பாவங்களையும், உங்களுக்காக மன்னித்துவிடுவான். அல்லாஹ் மிக்க மன்னிப்போனும், மிகவும் இரக்கமுடையோனுமாக இருக்கின்றான்."*

*ஆல - இம்ரான் (3 : 31)*

ஸஹாபாக்கள் (நபிதோழர்கள்) இறைத்தூதரவர்களை (நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை) நேசிப்பதிலும், அதற்காக தமது உயிர்களை

உடைமைகளை அர்ப்பணிப்பதிலும் சிறந்த உதாரண புருஷர்களாக இருந்து வந்தனர்.

இதுபற்றி இஸ்லாமிய வரலாற்றாசிரியர் இப்னு இஸ்ஹாக் அவர்கள் இவ்வாறு குறிப்பிடுகின்றார்கள். உஹுத் யுத்தத்தின் பின்னர் நபிகளார் (ஸல்) அவர்கள் தன்னைச் சூழ நின்றவர்களைப் பார்த்து, ஸஃது பின் ரபீஉ என்பவருக்கு என்ன நடந்தது. அவர் உயிரோடு இருக்கின்றாரா அல்லது மரணித்துவிட்டாரா என்பது பற்றி எடுத்துச் சொல்பவர், உங்களில் யார்? என்று கேட்டபோது ஒரு அன்சாரித் தோழர் எழுந்து நின்று, நான் நாயகமே! என்று கூறிவிட்டு, அந்த மனிதரைத் தேடிப்பார்த்தார். அப்போது, மரணித்தோருடன், தேடப்பட்ட மனிதரும் அதிக காயங்களுக்குள்ளாகி இறந்து விடும் நிலையில் விழுந்து கிடப்பதைப் பார்த்தார்.பிறகு இந்த அன்சாரித் தோழர், விழுந்து கிடந்த அவரைப் பார்த்து, நீர் உயிருடன் இருக்கின்றீரா அல்லது மரணித்து விட்டீரா என்பதைப் பார்த்து வரும்படி தன்னை நபிகளாரவர்கள் அனுப்பியதாகக் கூறினார். பின்னர் ஸஃது பின் ரபீஉ அவர்கள் வந்தவரைப் பார்த்து, ''நான் மரணிக்கும் நிலையில் இருக்கின்றேன். எனவே, எனது சலாத்தை நபிகளார் அவர்களுக்கு எத்திவையுங்கள்.

ஸஃது பின் ரபீஉ என்பவர் கூறுகின்றார்:

***"எம்மனைவர் சார்பிலும் அனைத்து நபிமார்களுக்குக் கிடைத்ததை விடவும் உயர்ந்ததொரு கூலியை அல்லாஹ் உங்களுக்கு அளிப்பானாக, என்ற விடயத்தை நபிகளாரிடம் எத்தி வையுங்கள். மேலும், உங்களது கூட்டத்தாருக்கும் எனது சலாத்தை எத்தி வையுங்கள்."***

ஸஃது பின் ரபீஉ என்பவர் உங்களுக்குக் கூறுகின்றார்:

***''உங்களில் ஒருவராவது உயிருடன் இருக்கும் நிலையில், உங்கள் நபியிடத்தில் நீங்கள் திரும்பிச் செல்வீர்களாயின், அல்லாஹ்விடத்தில் உங்களால் தப்பித்துக் கொள்ள முடியாது'' என்பதாகவும் அவர்களிடத்தில் கூறுங்கள், என்று கூறிய அதே நிலையில் ஷஹீதாகி விட்டார்கள். (இறையடி எய்தினார்கள்)***

*- அல் முவத்தா, அல் பிதாயா வந் நிஹாயா 4 : 39)*

நபித்தோழர் ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்: உஹுத் யுத்தம் எம்மை நெருங்கியிருந்த போது, இரவு வேளையில் எனது தந்தை என்னை அவரருகில் அழைத்து, எனக்குப் பின்வருமாறு உபதேசித்தார்:

*“எம்மை நெருங்கி வரும் புனிதப் போரில் நபித்தோழர்களில் முதன் முதலில் கொல்லப் படப்போகும் ஒருவனாக நான் என்னைக் காண்கிறேன். எனக்குப் பின்னால் உன்னைவிட என்னிடத்தில் கண்ணியத்திற்குரிய ஒருவரை விட்டுச் செல்வேனாயின் , அவர் இறைத் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களாகத்தான் இருப்பார். என்மீது ஒரு கடன் இருக்கின்றது. அதனை உடனே நிறைவேற்றிவிடு. மற்றும் உனது சகோதரிகளுக்கு எப்போதும் நல்லவற்றையே செய்வாயாக.”*

- புகாரி.

## 2. அல்லாஹ்வினதும், அவனது தூதரினதும் கட்டளைகளை (ஏவல்களை) முழுமையாக ஏற்றல்.

அல்லாஹ்வினதும், அவன் தூதரினதும் கட்டளை என்று எடுத்துரைக் கப்பட்டால் எவ்வித மறுப்புமின்றி அதனை உடனே ஏற்க வேண்டும். அது ஏவலாக இருப்பின் அதனை ஏற்று நடக்க வேண்டும். விலக்கலாயின் அதனை தவிர்ந்து நடக்க வேண்டும். இவ்வாறு செய்யும் போது அது பற்றிய பூரண உளத்திருப்தியும், அது சரியானது என்ற உறுதியும் இருக்க வேண்டும்.

அல்குர்ஆனில் இதுபற்றி வந்துள்ள வசனத்தின் கருத்து:

« إِنَّمَا كَانَ قَوْلَ ٱلْمُؤْمِنِينَ إِذَا دُعُوٓا۟ إِلَى ٱللَّهِ وَرَسُولِهِۦ لِيَحْكُمَ
بَيْنَهُمْ أَن يَقُولُوا۟ سَمِعْنَا وَأَطَعْنَا وَأُو۟لَٰٓئِكَ هُمُ ٱلْمُفْلِحُونَ ﴿٥١﴾
وَمَن يُطِعِ ٱللَّهَ وَرَسُولَهُۥ وَيَخْشَ ٱللَّهَ وَيَتَّقْهِ فَأُو۟لَٰٓئِكَ هُمُ ٱلْفَآئِزُونَ »

*“தமக்கிடையில் ஏற்பட்ட விவகாரங்களில் தீர்ப்புப்பெற அல்லாஹ் விடமும், அவனது தூதரிடமும் வரும்படி இறைநம்பிக்கையாளர்கள் அழைக்கப்பட்டால், அவர்கள், “நாங்கள் செவிசாய்த்தோம். நாங்கள் வழிப்பட்டுவிட்டோம்” என்றுதான் கூறுவார்கள். இவர்களே முற்றி லும் வெற்றியடைந்தவர்கள். மேலும், எவர்கள் அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் வழிப்பட்டு அல்லாஹ்வைப் பயந்து, (அவனுக்கு*

*மாறு செய்வதை விட்டு) ஒதுங்கிக் கொள்கின்றனரோ, அத்தகையோர் தாம் நிச்சயமாக வெற்றியாளர்கள்."*

*அந் - நூர் (24 : 51, 52)*

மேலும் அல்லாஹ் இதுபற்றிக் கூறும் போது

« فَلَا وَرَبِّكَ لَا يُؤْمِنُونَ حَتَّىٰ يُحَكِّمُوكَ فِيمَا شَجَرَ بَيْنَهُمْ ثُمَّ لَا يَجِدُوا فِي أَنفُسِهِمْ حَرَجًا مِّمَّا قَضَيْتَ وَيُسَلِّمُوا تَسْلِيمًا »

*"எனினும், உம் இறைவன்மீது சத்தியமாக, அவர்கள் தமக்கிடையில் ஏற்பட்டுவரும் சச்சரவுகளில், உம்மை நீதிபதியாக, அங்கீகரித்து நீர் செய்யும் தீர்ப்பை தம் மனதில் எத்தகைய அதிருப்தியுமின்றி ஏற்றுக் கொண்டு, வழிப்படாத வரையில் அவர்கள் உண்மை(முஸ்லிம்)விசுவாசி களாக மாட்டார்கள்."*

*அந் - நிஸா (4 : 65)*

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

"ஒரு முறை ரஸூலுல்லாஹ் (ஸல்) அவர்கள், ஒரு மனிதன் தன் கையில் தங்க மோதிரம் அணிந்திருப்பதைக் கண்டு, அதனைக் கழற்றி எறிந்து விட்டார்கள். பின்பு அங்கிருந்தவர்களைப் பார்த்து, "உங்களில் எவரேனும், தீப்பொறியொன்றை தம் கரங்களில் எடுத்து வைத்துக்கொள்ள விரும்பு வாரா" என்று கேட்டுவிட்டு சென்றுவிட்டார்கள். நபிகளார் அங்கிருந்து சென்றபிறகு அம்மனிதரை நோக்கி, உமக்கு இம்மோதிரத்தை எடுத்து, வேறு தேவைகளுக்குப் பயன்படுத்திக் கொள்ளலாமே என்று கூறப்பட்டது. அதற்கு அம்மனிதர், இறைதூதர் எறிந்துவிட்ட ஒன்றை, அல்லாஹ்வின் மீது சத்தியமாக, ஒரு போதும் எடுக்கமாட்டேன், என்று கூறிவிட்டு, அதனை எடுக்காமல் இருந்து விட்டார்."

*- முஸ்லிம்.*

ஒரு தடவை அரபுத் தலைவர்களில் ஒருவனான உயைனா என்பவன் அமீருல் மு."மினீன் (விசுவாசுகளின் தலைவர்) ஹஸ்ரத் உமர் (ரலி) அவர்க ளிடம் வந்து, கத்தாபின் மகன் உமரே, நீர் எமக்குக் கொடை கொடுப்பது மில்லை, எம்மத்தியில் நீதமான முறையில் தீர்ப்பு வழங்குவதுமில்லை, என்று கூறினார். இதனைக் கேட்ட உமர் (ரலி) அவர்கள் அவன்மீது கோபமுற்றவராக அவனைக் கடுமையாகப் பிடிக்க முனைந்தார். அப்போது அங்கிருந்த அல்ஹுர் பின் கைஸ் என்பவர், உமரவர்களைப் பார்த்து, அமீருல்

முஃமினீன் அவர்களே.அல்லாஹ் அவனது தூதரைப் பார்த்து. அல்குர்ஆனில் இவ்வாறு கூறியுள்ளானே, என்று சொல்லிவிட்டு கீழ்வரும் குர்ஆன் வசனத்தை ஓதிக் காண்பித்தார்.

« خُذِ ٱلْعَفْوَ وَأْمُرْ بِٱلْعُرْفِ وَأَعْرِضْ عَنِ ٱلْجَٰهِلِينَ »

***"(நபியே!) நீர் மன்னிக்கும் போக்கை மேற்கொள்வீராக. மேலும், நன்மையைக் கொண்டு ஏவி வருவீராக. அன்றி, அறிவீனர்களை விட்டு விலகியிருப்பீராக."***

*அல் - அஃராப் (7 : 199)*

*இந்த இறை வசனத்தைக் கேட்ட உடனேயே உமர் (ரலி) அவர்கள் தன் செய்கையை நிறுத்திவிட்டார்கள். ஏனெனில் உமர் (ரலி) அவர்கள் எப்போதும், அல்குர்ஆன் மூலம் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்பவர்களாக இருந்தார்கள்."*

*- புகாரி.*

## 3. விருப்பு வெறுப்பு அல்லாஹ்வுக்காகவே என்றிருத்தல்

இதன் கருத்து யாதெனில், பூமியில் இறை கட்டளைகளைப் பின்பற்றும் முஃமீன்களை, அவர்களின் அந்த நற்செயல்களுக்காக நேசிக்க வேண்டும். நிராகரிப்பாளர்களை, தீயவர்களை, பாவங்களில் மூழ்கியிருப்பவர்களை அவர்களிடம் உள்ள இத்தீய செய்கைகளுக்காக வெறுக்க வேண்டும்.

அல்குர்ஆன் இதுபற்றி இவ்வாறு விளக்குகின்றது:

« لَا تَجِدُ قَوْمًا يُؤْمِنُونَ بِٱللَّهِ وَٱلْيَوْمِ ٱلْآخِرِ يُوَآدُّونَ مَنْ حَآدَّ ٱللَّهَ وَرَسُولَهُۥ

وَلَوْ كَانُوٓا۟ ءَابَآءَهُمْ أَوْ أَبْنَآءَهُمْ أَوْ إِخْوَٰنَهُمْ أَوْ عَشِيرَتَهُمْ ۚ أُو۟لَٰٓئِكَ

كَتَبَ فِى قُلُوبِهِمُ ٱلْإِيمَٰنَ وَأَيَّدَهُم بِرُوحٍ مِّنْهُ ۖ وَيُدْخِلُهُمْ جَنَّٰتٍ تَجْرِى

مِن تَحْتِهَا ٱلْأَنْهَٰرُ خَٰلِدِينَ فِيهَا ۚ رَضِيَ ٱللَّهُ عَنْهُمْ وَرَضُوا۟ عَنْهُ ۚ أُو۟لَٰٓئِكَ

حِزْبُ ٱللَّهِ ۚ أَلَآ إِنَّ حِزْبَ ٱللَّهِ هُمُ ٱلْمُفْلِحُونَ ﴿٢٢﴾"

*"அல்லாஹ்வின் மீதும், மறுமைநாளின் மீதும் நம்பிக்கை வைத்திருக்கும் ஜனங்கள், அல்லாஹ்வையும், அவனது தூதரையும் எதிர்ப்பவர்கள், (நிராகரிப்பவர்கள்) மீது அன்பு செலுத்துவதை (நபியே!) நீர் காண மாட்டீர்! அத்தகையோர், அவர்களது தந்தையராயினும், அல்லது அவர்களது தனயர்களாயினும், அல்லது அவர்களது சகோதரர்களாயினும், அல்லது அவர்களது குடும்பத்தவர்களாயினும் சரியே! அவர்களது இருதயங்களில், அல்லாஹ் ஈமானைப் பதித்து வைத்துவிட்டான். மேலும், தன் சார்பிலிருந்து ரூஹை (ஒளியை அல்லது அல்குர்ஆனை) வழங்கி அவர்களுக்கு வலிமை சேர்த்தான்.*

*மேலும், கீழே ஆறுகள் ஓடும் சுவனங்களில் அவன் அவர்களைப் புகச் செய்வான். அங்கே அவர்கள் என்றென்றும் தங்கி வாழ்வார்கள். அல்லாஹ் அவர்களைக் கொண்டு திருப்தி அடைந்தான். அவர்களும் அல்லாஹ்வைக் கொண்டு திருப்தி அடைந்தார்கள். இத்தகையவர்கள் தான் அல்லாஹ்வின் கட்சியினராவார்கள். மேலும் நிச்சயமாக, அல்லாஹ்வின் கட்சியினர் தாம் என்றும் வெற்றியடையக் கூடியவர்கள்."*

*அல் - முஜாதலா (58 : 22)*

நபிகளார் (ஸல்) அவர்கள் கூறியதாக, அல் பர்ரா பின் ஆஸிப் அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

*"ஈமானின் முடிச்சுகளில் மிகவும் உறுதியான முடிச்சு, அல்லாஹ்வுக்காக ஒன்றை நேசிப்பதும் அல்லாஹ்வுக்காக ஒன்றை வெறுப்பதுமாகும்."*

*- அஹ்மத்.*

மேலும், நபிகளார் (ஸல்) அவர்கள் கூறியதாக அபூ உமாமா அல் பாஹிலி அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

" எவர் அல்லாஹ்வுக்காகவே ஒன்றை நேசித்தும், அல்லாஹ்வுக்காகவே ஒன்றை வெறுத்தும், மேலும் அல்லாஹ்வுக்காகவே ஒன்றைக் கொடுத்தும், அல்லாஹ்வுக்காகவே ஒன்றைத் தடுத்தும் வருகின்றாரோ அவரே ஈமானில் பூரணமானவர்."

(அஹ்மத், அபூ தாவூத்)

Bபத்ருப் போர் முடிந்ததும் முஸ்அப் பின் உமைர் அவர்கள் தனது சகோதரன், அபூ அஸீஸ் பின் உமைரைக் கடந்து செல்ல நேர்ந்த போது, அன்சாரீன்களில் (நபித்தோழர்களில்) ஒருவர்,அபூ அஸீஸை சிறைப்பிடித்து வைத்திருப்பதைப் பார்த்தார்கள். உடனே முஸ்அப் அவர்கள் அந்த அன்ஸாரித் தோழரை நோக்கி, இவரை உங்கள் இரு கரங்களாலும் நன்கு பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள்.ஏனெனில் இவரது தாய் மிகவும் வசதி படைத்தவள் என்பதால், உமக்கு நஷ்டஈடு ஏதும் கொடுத்து, உம்மிடமிருந்து அவரை விடுவிக்க முயற்சிக்கலாம், என்று கூறினார்.

இதனைக் கேட்ட முஸ்அப் அவர்களின் சகோதரர் அபூ அஸீஸ், முஸ்அபை நோக்கி, சகோதரரே, இது தான் நீர் எனக்குச் செய்யும் உபதேசமா? என்று கேட்ட போது, முஸ்அப் அவர்கள், தனது சகோதரன் அபூ அஸீஸைப் பார்த்து, நீ எனது சகோதரனல்ல, உன்னைச் சிறைப்பிடித்திருப்பவர் தான் உண்மையில் எனது சகோதரன், எனப் பதிலளித்தார்கள்.

## *4. இம்மையை விட மறுமையை மேம்படுத்தல் (அதிகம் நேசித்தல்)*

இவ்வுலகம், ஆகிராவை (மறுமை நாளை) விட அந்தஸ்த்தில் உயர்ந்தது, எனக் கருதி, இவ்வுலகோடு அளவுமீறி ஒட்டிக் கொள்பவனுடைய உள்ளம், மறுமை நாளை அலட்சியமாகவே கருதும். இதற்கு மாற்றமாக, கியாம நாளோடு எவரது உள்ளம், இணைந்து விடுகின்றதோ, அவர் மறுமையை அடைவதற்கான ஒரு பாலமாக இவ்வுலகைப் பயன்படுத்திக் கொள்வார். அதாவது, மறுமைக்குரிய விளை நிலமாக இம்மையைப் பயன்படுத்துவார்.

அல் குர்ஆனில் அல்லாஹ் இதுபற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகின்றான்.

"எவன் வரம்புமீறி (மறுமையைப் புறக்கணித்து) இவ்வுலக வாழ்க்கையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டானோ, அவன் தங்குமிடம் நிச்சயமாக நரகம் தான். எவர் தன் இறைவனின் சந்நிதி (யில் விசாரணைக்காக நிற்பதைப்) பற்றிப் பயந்து (கீழ்த்தரமான சரீர) இச்சையை விட்டும் தனனைத் தடுத்துக் கொண்டாரோ அவர் தங்குமிடம், நிச்சயமாகச் சுவனபதிதான்."

அந்-நாஸிஆத் (79:37-41)

நபித் தோழர் அனஸ் பின் மாலிக்(ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

"ஒரு முறை நபிகளார் (ஸல்) அவர்கள், அன்ஸாரித் தோழர்களில் ஒருவரான, ஹாரிஸாவைச் சந்தித்த வேளையில், அவருக்கு ஸலாம் கூறிவிட்டு, அவரைப் பார்த்து, ஹாரிஸாவே, நீர் காலை வேளையை எந்த நிலையில் அடைந்தீர், என வினவியபோது, "ஓர் உண்மை விசுவாசி, என்ற நிலையில் நான் காலையை அடைந்தேன்," என ஹாரிஸா அவர்கள் பதிலளித்தார்கள். மீண்டும் நபியவர்கள், ஹாரிஸாவைப் பார்த்து, நீர் கூறக்கூடிய வார்த்தைகளை நன்றாகக் கவனிப்பீராயின்; (உமது வாயிலிருந்து வெளியாகும்) ஒவ்வொரு வாரத்தைக்கும் ஒரு யதார்த்த நிலை இருப்பதைக் கண்டு கொள்வீர். அவ்வாறாயின் உமது ஈமானின் யதார்த்த நிலை யாது? என நபியவர்கள் வினவினார்கள்.

அதற்கு ஹாரிஸா அவர்கள், " இறைத்தூதர் அவர்களே, உலக விடயங்களில் ஈடுபட்டு நான் அதிகம் களைப்படைந்து விட்டேன். அதனால், இரவு முழுவதும் கண் விழித்தும், பகல் முழுவதும் தாகித்தும், இருந்தேன். அவ் வேளையில், அல்லாஹ்வின் அர்ஷையும், (ஆட்சிபீடம்) அதில் சுவர்க்கவாசிகள் ஒருவருக்கொருவர் பரஸ்பரம் சந்தித்துக் கொள்வதையும், அதில் நரகவாசிகள் ஒருவருக்கொருவர் ஓலமிடுவதையும், பார்ப்பது போன்று எனக்குத் தோன்றியது," என நபிகளாரிடம் கூறினார்கள். அதற்கு இறைத்தூதர் (ஸல்) அவர்கள், "ஹாரிஸாவே, நீர் உண்மை எதுவென்பதைப் புரிந்து விட்டீர். அதன் படியே செயல்படுவீராக, எனக் கூறிவிட்டு, அல்லாஹ் இந்த அடியானின் உள்ளத்தில் ஈமானின் ஒளியைப் பாய்ச்சியுள்ளான், என விளக்கமளித்தார்கள்."

ஆதாரம் : அத்-தபரானி, அல்-பஸ்ஸார் (அறிவிப்பாளர் பட்டியல் இரண்டும் பலவீனமானவை)

## 5. பள்ளிவாயில்களை (மஸ்ஜிதுகளை) நிர்வகித்தல்

மனிதர்கள் தம் தொழுகைகளையும், ஏனைய வணக்க வழிபாடுகளையும் கூட்டாக (ஜமாஅத்தாக) குறித்த நேரத்தில் நிறைவேற்றுவதற்காக பள்ளிவாயில்களைக் கட்டியெழுப்புவதும், உரிய நேரத்தில் கடமையான தொழுகைகளை அங்கே தொழுவதும், "பள்ளிவாசல்களை நிர்வகித்தல்" என்ற இந்தத் தலைப்பில் அடங்கும். பள்ளிவாயில்களைக் கட்டியெழுப்பு வதில் ஒருவர் ஈடுபட்டாலும் கூட, அவர் அங்கு சென்று கடமையான தொழுகைகளை ஜமாஅத்துடன் (கூட்டாக) நிறைவேற்றவிட்டால், அத்தகையவர்களை "பள்ளிவாசல்களை நிர்வகிப்பவர்கள்" என்ற தலைப்பில் அடக்க முடியாது.

இவர்கள் பற்றி அல்குர்ஆன் கீழ்வருமாறு குறிப்பிடுகின்றது:

« إِنَّمَا يَعْمُرُ مَسَـٰجِدَ ٱللَّهِ مَنْ ءَامَنَ بِٱللَّهِ وَٱلْيَوْمِ ٱلْءَاخِرِ وَأَقَامَ ٱلصَّلَوٰةَ وَءَاتَى ٱلزَّكَوٰةَ وَلَمْ يَخْشَ إِلَّا ٱللَّهَ فَعَسَىٰٓ أُو۟لَـٰٓئِكَ أَن يَكُونُوا۟ مِنَ ٱلْمُهْتَدِينَ » .

***"எவர்கள் அல்லாஹ்வையும் இறுதிநாளையும் விசுவாசித்து, தொழுகையையும் கடைப்பிடித்து, ஸகாத்தும் கொடுத்து வருவதுடன் அல்லாஹ்வையன்றி மற்றெவருக்கும் பயப்படாமலும் இருக்கின்றார்களோ அவர்கள்தாம் அல்லாஹ்வுடைய பள்ளிகளைப் பரிபாலனம் செய்யக் கூடியவர்கள் இவர்கள்தாம், நேரான வழியில் இருக்கக் கூடியவர்கள்."***

*அத் - தவ்பா (9 : 18)*

« فِى بُيُوتٍ أَذِنَ ٱللَّهُ أَن تُرْفَعَ وَيُذْكَرَ فِيهَا ٱسْمُهُۥ يُسَبِّحُ لَهُۥ فِيهَا بِٱلْغُدُوِّ وَٱلْءَاصَالِ ﴿٣٦﴾ رِجَالٌ لَّا تُلْهِيهِمْ تِجَـٰرَةٌ وَلَا بَيْعٌ عَن ذِكْرِ ٱللَّهِ وَإِقَامِ ٱلصَّلَوٰةِ وَإِيتَآءِ ٱلزَّكَوٰةِ يَخَافُونَ يَوْمًا تَتَقَلَّبُ فِيهِ ٱلْقُلُوبُ وَٱلْأَبْصَـٰرُ ﴿٣٧﴾ »

*"அத்தகைய வீடுகளில், அல்லாஹ்வின் திருநாமத்தைக் கூறி, அதை கண்ணியப்படுத்தும்படி, அல்லாஹ் அனுமதியளித்துள்ளான். அவற்றில் காலையிலும், மாலையிலும் அவனைத் துதி செய்துகொண்டு பலர் இருக்கின்றனர். அவர்கள் (எத்தகையோரென்றால்) அவர்களுடைய வர்த்தகக் கொடுக்கல் வாங்கல் முதலியவை அல்லாஹ்வுடைய திருநாமத்தை ஞாபகப்படுத்துவதிலிருந்தும்,தொழுகையை உறுதியாக அனுஷ்டிப்பதிலிருந்தும், ஸகாத்துக் கொடுப்பதிலிருந்தும், அவர்களைத் திருப்பி விடாது. அவர்களது இருதயங்களும், பார்வைகளும் (பயத்தால்) திடுக்கிட்டுத் தடுமாறி விடக்கூடிய நாளையே (அவர்கள் எந்நேரமும்) பயந்து கொண்டிருக்கின்றனர்."*

*அந் - நூர் (24 : 36, 37)*

நபிகளார் (ஸல்) அவர்கள் கூறியதாக, அபூ ஸஈத் (ரலி) என்ற நபித்தோழர் அறிவிக்கின்றார்கள்:

*"மஸ்ஜிதுக்குச் (பள்ளிவாயிலுக்கு) செல்வதை வழமையாக்கிக் கொண்ட மனிதனைக் காண்பீர்களாயின், அம்மனிதன் இறைநம்பிக்கையுடையவன் என்பதற்கு நீங்கள் சாட்சியாக இருங்கள்."*

*- அஹ்மத், திர்மிதி, இப்னு மாஜா.*

## 6. நன்மைகளில் ஆர்வமும் தீமைகளில் வெறுப்பும் ஏற்படல்

ஓர் உண்மை இறைவிசுவாசி (முஃமீன்) உலக வாழ்வில் தான் எப்படி வாழ வேண்டுமென்பதை, அல்லாஹ்வினதும், அவனது தூதரதும் கட்டளைகளுக்கேற்ப தானே திட்டமிட்டுக் கொள்வான். மார்க்கம் அனுமதித்ததை அனுமதிக்கப்பட்டதாகவும் (ஹலால்), மார்க்கம் விலக்கியதை விலக்கப்பட்டதாகவும் (ஹராம்) அவன் எடுத்துக் கொள்வான். நன்மையான விடயமொன்றைக் கண்டால் அல்லது அவன் மேற்கொண்டால் அதுபற்றி மிகவும் மகிழ்ச்சியடைவான். தீமையொன்றைக் கண்டால் அல்லது காதால் கேட்டால் அல்லது அதிலீடுபட்டால் அதுபற்றி மிகவும் துக்கப்படுவான். அதற்காக வருந்துவான்.

நபிகளார் (ஸல்) அவர்கள் இதுபற்றி பின்வருமாறு தெளிவுபடுத்துகிறார்கள்:

*"நன்மையான ஒரு விடயம், உன்னை சந்தோஷப்படுத்தி, தீங்கான ஒரு விடயம் உன்னை கவலைகொள்ளச் செய்யுமாயின், நீ ஓர்*

*உண்மையான முஃமீனாவாய். (இறைவிசுவாசியாவாய்)"*

எனவே, ஒரு முஃமீன் (இறை விசுவாசி) எப்போதும் நன்மையைக் கொண்டு ஏவுபவனாகவும், தீமையைக் கொண்டு தடுப்பவனாகவும் இருப்பான்.

முஃமீன்கள் பற்றி அல்குர்ஆன் இவ்வாறு கூறுகின்றது:

« وَٱلْمُؤْمِنُونَ وَٱلْمُؤْمِنَٰتُ بَعْضُهُمْ أَوْلِيَآءُ بَعْضٍ يَأْمُرُونَ بِٱلْمَعْرُوفِ وَيَنْهَوْنَ عَنِ ٱلْمُنكَرِ وَيُقِيمُونَ ٱلصَّلَوٰةَ وَيُؤْتُونَ ٱلزَّكَوٰةَ وَيُطِيعُونَ ٱللَّهَ وَرَسُولَهُۥٓ أُوْلَٰٓئِكَ سَيَرْحَمُهُمُ ٱللَّهُ إِنَّ ٱللَّهَ عَزِيزٌ حَكِيمٌ »

*"விசுவாசங்கொண்ட ஆண்களும், பெண்களும் தாம் (தங்களுக்குள்) ஒருவருக்கொருவர் உற்ற துணைவர்களாக இருக்கின்றனர். அவர்கள் (ஒருவர் மற்றவரை) நன்மை செய்யும்படி தூண்டியும், பாவங்கள் செய்வதைத் தடுத்தும், தொழுகையைக் கடைப்பிடித்தும், ஸகாத் கொடுத்தும் வருவார்கள். அல்லாஹ்வுக்கும், அவன் தூதருக்கும் வழிப்பட்டும் நடப்பார்கள். இத்தகையோருக்கு அதிசீக்கிரத்தில் அல்லாஹ் அருள் புரிவான். நிச்சயமாக அல்லாஹ் மிகைத்தோனும், ஞானமுடையோனுமாக இருக்கின்றான்."*

*அத் - தவ்பா (9 : 71)*

அவ்வாறே, முஃமீன்கள் அறப்போரை (ஜிஹாத்) விரும்புவார்கள். ஏனெனில் இந்த அறப்போரில், அல்லாஹ்வின் மார்க்கத்தை உயர்த்துவதற்காகவும், பாவிகள், இறைவனை மறுப்பவர்கள், இறைவனை நிராகரிப்பவர்கள் போன்றோரை அடக்குவதற்காகவும் முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. ஏனெனில், ஒருவன் தனது செல்வத்தைக் கொண்டும், ஆத்மாவைக் கொண்டும் இப்புனித அறப்போரில் ஈடுபடுவது இறை நம்பிக்கையாளரின் சிறந்த பண்பாகக் கருதப்படுகின்றது.

இதுபற்றி அல்குர்ஆன் கீழ்வருமாறு குறிப்பிடுகின்றது:

« إِنَّمَا ٱلْمُؤْمِنُونَ ٱلَّذِينَ ءَامَنُوا۟ بِٱللَّهِ وَرَسُولِهِۦ ثُمَّ لَمْ يَرْتَابُوا۟ وَجَٰهَدُوا۟ بِأَمْوَٰلِهِمْ وَأَنفُسِهِمْ فِى سَبِيلِ ٱللَّهِ أُوْلَٰٓئِكَ هُمُ ٱلصَّٰدِقُونَ »

***"உண்மை விசுவாசிகள் யாரென்றால், அவர்கள் அல்லாஹ்வையும், அவனது தூதரையும் (மெய்யாகவே) விசுவாசங்கொண்டு, அதில் எவ்வித சந்தேகமும் கொள்ளாது, அல்லாஹ்வுடைய பாதையில் தங்களது உயிர்களையும், பொருள்களையும் அர்ப்பணித்து போர் புரிவார்கள். இவர்கள் தாம் (தம் விசுவாசத்தில்) உண்மையானவர்கள்."***

*அல் - ஹுஜ்ராத் (49 : 15)*

## 7. இறை ஏற்பாடு, நிர்ணயம் பற்றிப் பூரண திருப்திகொள்ளல்:

ஓர் இறைவிசுவாசி (முஃமீன்) இறைவன் அவன்மீது ஏற்படுத்தி வைத்துள்ள விதிகளைப் பூரண திருப்தியோடு ஏற்றுக் கொள்ளவேண்டும். அவன் தனக்கு ஏற்படும் துன்பங்களின் போது பொறுமையோடு இருந்தால், அதற்கு அல்லாஹ்விடமிருந்து உயர்ந்த நற்கூலிகள் கிடைக்கும் என்பதில் சந்தேகமில்லை.

அல்குர்ஆனில் அல்லாஹ் இவ்வாறு குறிப்பிடுகின்றான்:

» وَلَنَبْلُوَنَّكُم بِشَيْءٍ مِّنَ ٱلْخَوْفِ وَٱلْجُوعِ وَنَقْصٍ مِّنَ ٱلْأَمْوَٰلِ
وَٱلْأَنفُسِ وَٱلثَّمَرَٰتِ ۗ وَبَشِّرِ ٱلصَّٰبِرِينَ ﴿١٥٥﴾ ٱلَّذِينَ إِذَآ أَصَٰبَتْهُم
مُّصِيبَةٌ قَالُوٓا۟ إِنَّا لِلَّهِ وَإِنَّآ إِلَيْهِ رَٰجِعُونَ ﴿١٥٦﴾ أُو۟لَٰٓئِكَ عَلَيْهِمْ صَلَوَٰتٌ
مِّن رَّبِّهِمْ وَرَحْمَةٌ ۖ وَأُو۟لَٰٓئِكَ هُمُ ٱلْمُهْتَدُونَ «

*"(விசுவாசிகளே!) ஓரளவான பயத்தாலும், பசியாலும், பொருட்கள், உயிர்கள், விளைச்சல்கள் ஆகியவற்றில் (ஏற்படும்) நஷ்டத்தாலும், நிச்சயமாக நாம் உங்களை சோதிப்போம். என்றாலும், (நபியே! இச்சோதனைகளால் ஏற்படும் கஷ்டங்களைச்) சகித்துக் கொண்டிருப்போருக்கு நீர் நன்மாராயம் கூறுவீராக!. அவர்களுக்குத் துன்பங்கள் ஏற்படும் போதெல்லாம், "நிச்சயமாக நாம் அல்லாஹ்வுக்காகவே இருக்கின்றோம். மேலும், நிச்சயமாக நாம் அவனளவிலேயே மீளக் கூடியவர்களாக இருக்கின்றோம்" என்று கூறுவார்கள். இத்தகையோர்*

*மீது, அவர்களது இறைவனிடத்திலிருந்து ஸலவாத்தும், அவனது அருளும் உண்டாவதாக. இவர்கள் தாம் (உண்மையில்) நேர்வழியில் இருப்பவர்கள்.''*

*அல் - பகறா (2 : 155 - 157)*

ஒரு மனிதனது பாவங்களை (தீவினைகளை) மன்னித்து, அவனது அந்தஸ்தை உயர்த்துவதற்காகவே, இவ்வாறு அவனை, இறைவன் சோதனைகளுக்கு உட்படுத்துகிறான்.

நபிகளார் (ஸல்) அவர்கள் கூறியதாக, ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

*''ஓர் இறைவிசுவாசிக்கு எந்தவொரு பீடை ஏற்படுவதாக இருந்தாலும், அவனது காலில் ஒரு முள் தைப்பதாக இருந்தாலும் சரி அதற்காக அல்லாஹ், அவனுக்கு ஒரு நன்மையை வழங்குவதோடு, அவனது பாவங்களில் ஒன்றை மன்னித்தும் விடுகின்றான்.''*

*- முஸ்லிம்.*

நபிகளார் (ஸல்) அவர்கள் கூற, தாம் கேட்ட ஹதீஸொன்றை நபித்தோழர்களான அபூஹுரைரா (ரலி) அவர்களும், அபு ஸஈது (ரலி) அவர்களும் பின்வருமாறு அறிவிக்கின்றார்கள்:

*''ஒரு முஃமினுக்கு ஏற்படக்கூடிய நோய், சஞ்சலம், கஷ்டம், துன்பங்கள் எதுவாக இருப்பினும் அது அவனை பீடிக்கும் ஒரு பீடிகையாக இருந்தாலும், அதனைக் கொண்டு அவனது பாவங்களில் ஒன்று மன்னிக்கப்பட்டு விடுகின்றது.''*

*- முஸ்லிம்.*

# ஈமானின் (இறை நம்பிக்கையின்) நற்பயன்கள்:

இதுவரை நாம், ஈமானின் சில அடையாளங்களை சுருக்கமான முறையில் தெரிந்து கொண்டோம். இனி, தனது சொல், செயல், நடத்தை, கொள்கை அனைத்திலும் உறுதியான ஈமானோடு வாழக்கூடிய ஒருவருக்கு அந்த ஈமானின் மூலம் கிடைக்கக் கூடிய நல்ல சில விளைவுகளை இங்கே பார்ப்போம்.

## *1. முஃமின் மீது (இறை விசுவாசியின் மீது) இறைவன் வைக்கும் அன்பு*

அல்லாஹ்வை நம்பக்கூடிய இறைவிசுவாசியை, அல்லாஹ் மிகவும் நேசிப்பதோடு, அவனுக்குப் பாதுகாப்பும் அளித்து, அவனது விடயங்களைத் தான் பொறுப்பேற்று, அவனுக்கு உதவியும் செய்கின்றான்.

அல்குர்ஆன் இதுபற்றிப் பின்வருமாறு கூறுகின்றது:

« ٱللَّهُ وَلِيُّ ٱلَّذِينَ ءَامَنُوا۟ يُخْرِجُهُم مِّنَ ٱلظُّلُمَٰتِ إِلَى ٱلنُّورِ »

***"(உண்மையாகவே) அல்லாஹ் விசுவாசிகளின் பாதுகாவலன். அவன், அவர்களை இருளிலிருந்து வெளியேற்றி, பேரொளியின்பால் செலுத்துகிறான்."***

*அல் - பகரா (2 : 257)*

அல்லாஹ் மேலும் கூறுகின்றான்:

« إِنَّ ٱللَّهَ يُدَٰفِعُ عَنِ ٱلَّذِينَ ءَامَنُوٓا۟ إِنَّ ٱللَّهَ لَا يُحِبُّ كُلَّ خَوَّانٍ كَفُورٍ »

*"நிச்சயமாக அல்லாஹ், விசுவாசங் கொண்டவர்களை (நிராக ரிப்போரின் தீங்கிலிருந்து) பாதுகாத்துக் கொள்கிறான். நிச்சயமாக அல்லாஹ் நன்றி கெட்ட மோசடிக்காரர் எவரையும் விரும்புவதில்லை."*

*அல் - ஹஜ் (22 : 38)*

அல்லாஹ் தனது அடியானை விரும்புவானாகில், புவியில் யாரும் அவனை ஏற்றுக் கொள்ளக் கூடிய ஒருவனாக ஆக்கிவிடுகின்றான். இதன் விளைவாக பூமியிலுள்ள இறையடியார்கள் அவனை நேசிப்பவர்களாக ஆகிவிடுவார்கள். இக்கருத்தையே பின்வரும் திருமறை வசனம் பிரதிபலிக்கின்றது.

« إِنَّ ٱلَّذِينَ ءَامَنُوا۟ وَعَمِلُوا۟ ٱلصَّـٰلِحَـٰتِ سَيَجْعَلُ لَهُمُ ٱلرَّحْمَـٰنُ وُدًّا »

*"எவர்கள் விசுவாசங்கொண்டு நற்கருமங்களைச் செய்கின்றார் களோ அவர்களை, யாவரும் நேசிக்கும்படி அருளாளனான (அல்லாஹ்) செய்து விடுகின்றான்."*

*மர்யம் (19 : 96)*

நபிகளார் (ஸல்) அவர்கள் கூறியதாக நபித் தோழர் அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

*"அல்லாஹ் ஒரு அடியானை நேசிப்பானாகில், வானவரான ஜிப்ரீல் (அலை) அவர்களை அழைத்து, அல்லாஹ் இன்ன மனிதனை நேசிக்கிறான். ஆகவே, நீரும் அவனை நேசிப்பீராக, என்று கேட்பான். பின்னர், ஜிப்ரீல் (அலை) அவர்களும் அந்த மனிதனை நேசித்துவிட்டு, வானத்திலுள்ளோர்க்கும் அதுபற்றி அறிவிப்பார். பின்னர், புவியில் அம்மனிதனை (யாவரும்) ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒருவனாக (அல் லாஹ்) ஆக்கிவிடுவான். இதனையே அல்லாஹ் விசுவாசங்கொண்டு நற்கருமங்களைச் செய்பவர்களை யாவரும் நேசிக்கும்படி அருளா ளனான (அல்லாஹ்) செய்துவிடுகிறான்." என்ற கருத்தில் குர்ஆனில் குறிப்பிடுகின்றான். "அதேவேளை, ஒரு மனிதனை அல்லாஹ் வெறுப் பானாகில் வானவரான, ஜிப்ரீல் (அலை) அவர்களை அழைத்து, நான் இன்ன மனிதனை வெறுத்துவிட்டேன். எனவே, நீரும் அவனை வெறுப் பீராக, என்று கேட்பான். பின்னர், ஜிப்ரீல் (அலை) அவர்களும் அம்மனி தனை வெறுத்துவிட்டு, வானத்தில் உள்ளோர்க்கு அதுபற்றி அறிவித்து விடுவார். இதன் விளைவாக, பூமியில் அம்மனிதனை வெறுப்பவர்கள் உருவாகிவிடுவார்கள்."*

- புகாரி, முஸ்லிம்.

## 2. மலக்குகளின் (வானவர்களின்) இஸ்திஃபாரும், முஃமீன்களின் துஆவும்

முஃமீன்களுக்காக மலக்குகள் இஸ்திஃபார் (பாவமன்னிப்புக் கோருதல்) செய்கின்றார்கள் என்பதைப் பின்வரும் அல்குர்ஆன் வசனம் தெளிவு படுத்துகின்றது.

﴿ ٱلَّذِينَ يَحْمِلُونَ ٱلْعَرْشَ وَمَنْ حَوْلَهُۥ يُسَبِّحُونَ
بِحَمْدِ رَبِّهِمْ وَيُؤْمِنُونَ بِهِۦ وَيَسْتَغْفِرُونَ لِلَّذِينَ ءَامَنُوا۟
رَبَّنَا وَسِعْتَ كُلَّ شَىْءٍ رَّحْمَةً وَعِلْمًا فَٱغْفِرْ لِلَّذِينَ تَابُوا۟
وَٱتَّبَعُوا۟ سَبِيلَكَ وَقِهِمْ عَذَابَ ٱلْجَحِيمِ ﴿٧﴾ رَبَّنَا
وَأَدْخِلْهُمْ جَنَّٰتِ عَدْنٍ ٱلَّتِى وَعَدتَّهُمْ وَمَن صَلَحَ مِنْ
ءَابَآئِهِمْ وَأَزْوَٰجِهِمْ وَذُرِّيَّٰتِهِمْ ۚ إِنَّكَ أَنتَ ٱلْعَزِيزُ
ٱلْحَكِيمُ ﴿٨﴾ وَقِهِمُ ٱلسَّيِّـَٔاتِ ۚ وَمَن تَقِ ٱلسَّيِّـَٔاتِ يَوْمَئِذٍ
فَقَدْ رَحِمْتَهُۥ ۚ وَذَٰلِكَ هُوَ ٱلْفَوْزُ ٱلْعَظِيمُ ﴾

*“அர்ஷைச் சுமந்து இருப்பவர்களும், அதனைச் சூழ இருப்பவர்களும் தம்மிறைவனின் புகழைக் கொண்டு (அவனைத்) துதி செய்கி*

*றார்கள். அவனை விசுவாசிக்கவும் செய்கிறார்கள். விசுவாசம் கொண்டோரின் குற்றங்களை மன்னிக்கும்படியும் கோருகிறார்கள். "எங்கள் இறைவனே! நீ உனது ஞானத்தாலும், கருணையாலும் யாவையும் சூழ்ந்து நிற்கிறாய். ஆகவே, (பாவங்களை விட்டு) விலகி உன்னுடைய வழியைப் பின்பற்றுவோருக்கு நீ மன்னிப்பளித்து, அவர்களை நரக வேதனையிலிருந்து காத்துக் கொள்வாயாக."*

*"எங்கள் இறைவனே! நீ அவர்களுக்கு வாக்களித்திருக்கும் நிலையான சுவன பதிகளில், அவர்களையும், அவர்களது மூதாதையர்களிலும், அவர்களது மனைவிமார்களிலும், அவர்களது சந்ததிகளிலுமுள்ள நல்லோர்களையும் நுழைவிப்பாயாக. நிச்சயமாக நீயே, (யாவரையும்) மிகைத்தோனும், (யாவையும் அறிந்த) ஞானமுடையோனுமாக இருக்கின்றாய்."*

*"மேலும், அவர்களை (சகல) தீங்குகளிலுமிருந்தும் பாதுகாப்பாயாக. அன்றைய தினம் நீ எவரை (சகல) தீங்குகளிலிருந்தும் பாதுகாத்துக் கொண்டாயோ நிச்சயமாக அவர்மீது நீ, பேரருள் புரிந்து விட்டாய். இதுவே மகத்தான பெரும் வெற்றியாகும். (என்று அவர்கள் பிரார்த்திக்கின்றார்கள்)"*

*அல் - க்ஹாபிர் (40 : 7 - 9)*

இவ்வாறுதான் விசுவாசிகள், தொழுகைகளிலும் ஏனைய வணக்க வழிபாடுகளிலும் ஒருவர் மற்றவருக்காகப் பிரார்த்தித்துக் கொள்கின்றார்கள். தொழுகையில் இருப்பில் ஓதக்கூடிய "தஷஹ்ஹுத்" ஓதலில், தன்மீதும் தன்னை அண்டியுள்ள இறையடியார்கள் மீதும் சாந்தி (சலாம்) உண்டாகும்படி பிரார்த்திக்கின்றார்கள். மற்றும் முஃமீன்கள் தமது பிரார்த்தனையில் ஏனைய முஃமீன் ஆண்களுக்காகவும், பெண்களுக்காகவும், உயிரோடுள்ளவர்கள், மரணித்தவர்கள் எல்லோருக்காகவும் அதிகம் துஆக் கேட்கின்றார்கள்.

இறைதூதர்களான நூஹ் (அலை), இப்றாஹீம் (அலை) போன்றவர்களும் விசுவாசிகளான ஆண்கள், பெண்கள் அனைவருக்காகவும் பிரார்த்தித்து வந்தார்கள் என்பதை அல்குர்ஆனில் அல்லாஹ் தெளிவாக எடுத்துக் காட்டுகிறான். சூரா இப்றாஹீம், சூரா நூஹ் ஆகிய இரு சூராக்களிலும் முறையே 41ம் வசனத்திலும், 28ம் வசனத்திலும் இப்பிரார்த்தனைகள் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

## 3. ஈருலகிலும் இறைத்தண்டனைகளிலிருந்து கிடைக்கும் பாதுகாப்பு

உலகில் அவர்களுக்குக் கிடைக்கும் ஈடேற்றத்தைப் பின்வரும் திருமறை வசனம் விளக்குகின்றது.

﴿ فَهَلْ يَنتَظِرُونَ إِلَّا مِثْلَ أَيَّامِ ٱلَّذِينَ خَلَوْا۟ مِن قَبْلِهِمْ قُلْ فَٱنتَظِرُوٓا۟ إِنِّى مَعَكُم مِّنَ ٱلْمُنتَظِرِينَ ﴿١٠٢﴾ ثُمَّ نُنَجِّى رُسُلَنَا وَٱلَّذِينَ ءَامَنُوا۟ كَذَٰلِكَ حَقًّا عَلَيْنَا نُنجِ ٱلْمُؤْمِنِينَ ﴾

*"(நபியே!) அவர்கள் தங்களுக்கு முன் சென்றவர்களுக்கு ஏற்பட்ட கஷ்டத்தைப் போன்றதேயன்றி, (வேறெதனையும்) எதிர்பார்க்கின்றனரா? (எனவே, அவர்களை நோக்கி, அத்தகைய கஷ்ட காலம்தான் உங்களை நோக்கியும் வர இருக்கின்றது) ஆகவே,(அதனை) நீங்களும் எதிர்பார்த்திருங்கள். நிச்சயமாக நானும் (அது உங்களுக்கு வருவதை) உங்களுடன் (இருந்து) எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன், என்று கூறுவீராக."*

*"(அவ்வாறு வேதனை வரும் காலத்தில்) நாம் நம்முடைய தூதர்களையும் விசுவாசங் கொண்டோரையும் பாதுகாத்துக் கொள்வோம். ஏனெனில் விசுவாசங் கொண்டவர்களைப் பாதுகாத்துக் கொள்வது நம்மீது கடமையாகவே இருக்கின்றது."*

*யூனுஸ் (10 : 102, 103)*

அவ்வாறே கியாமநாளின் பயங்கர விடயங்களிலிருந்தும், நரக நெருப்பிலிருந்தும் அல்லாஹ் விசுவாசிகளுக்குப் பாதுகாப்பளிக்கின்றான். இது பற்றிக் கீழ்வரும் வசனம் தெளிவுபடுத்துகின்றது.

﴿ سَابِقُوٓا۟ إِلَىٰ مَغْفِرَةٍ مِّن رَّبِّكُمْ وَجَنَّةٍ عَرْضُهَا كَعَرْضِ ٱلسَّمَآءِ وَٱلْأَرْضِ أُعِدَّتْ لِلَّذِينَ ءَامَنُوا۟ بِٱللَّهِ وَرُسُلِهِۦ ذَٰلِكَ فَضْلُ ٱللَّهِ يُؤْتِيهِ مَن يَشَآءُ وَٱللَّهُ ذُو ٱلْفَضْلِ ٱلْعَظِيمِ ﴾

*"(ஆகவே மனிதர்களே!) நீங்கள் உங்கள் இறைவனின் மன்னிப்பளவிலும் சுவனபதியளவிலும் விரைந்து செல்லுங்கள். அதன் பரப்பளவு, வானம் பூமியின் பரப்பளவைப் போன்று இருக்கின்றது. அது அல்லாஹ்வையும், அவனது தூதர்களையும் விசுவாசம் கொண்டோருக்காகவே தயார் செய்யப்பட்டுள்ளது. அது அல்லாஹ்வுடைய பேரருளாகும். அதனை அவன் விரும்பிய (நல்ல)வர்களுக்கே கொடுக்கின்றான். மேலும், அல்லாஹ் மகத்தான அருளை உடையவனாவான்."*

*அல் - ஹதீத் (57 : 21)*

## 4. வணக்க வழிபாடுகளின்போது உள்ளத்தில் ஏற்படும் இன்பமும், மகிழ்வும்

இறைவிசுவாசிகளான நல்லடியார்களுக்கு, அல்லாஹ் வாக்களித்துள்ள இன்பகரமான நல் வாழ்வு பற்றியே இத்தலைப்பு குறிப்பிடுகின்றது.

அல்குர்ஆன் இதுபற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகின்றது:

« مَنْ عَمِلَ صَـٰلِحًا مِّن ذَكَرٍ أَوْ أُنثَىٰ وَهُوَ مُؤْمِنٌ فَلَنُحْيِيَنَّهُۥ حَيَوٰةً طَيِّبَةً ۖ وَلَنَجْزِيَنَّهُمْ أَجْرَهُم بِأَحْسَنِ مَا كَانُوا۟ يَعْمَلُونَ »

*"விசுவாசங் கொண்டு, நற்கருமங்களை ஆணோ அல்லது பெண்ணோ எவர் செய்தாலும் நிச்சயமாக நாம் அவர்களை (இம்மையில்) நல்ல வாழ்க்கை வாழச் செய்வோம். அன்றி, (மறுமையிலோ) அவர்கள் செய்து கொண்டிருந்ததைவிட மிக்க அழகான கூலியையே நிச்சயமாக நாம் அவர்களுக்கு கொடுப்போம்."*

*அந் - நஹ்ல் (16 : 97)*

மேலும் எவன், அல்லாஹ்வைப் பயப்பட்டு வாழ்கிறானோ, அவனுக்கு அவனது எல்லாவிடயங்களையும் இலகுவாக்கிக் கொடுத்து, அவன் வாழ்க்கைத் தேவைகளையும் பெற்றுக் கொள்வதற்குரிய வழிமுறைகளையும் அல்லாஹ் அவனுக்கு ஏற்படுத்திக் கொடுக்கின்றான்.

அல்குர்ஆன் இதுபற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகின்றது:

« وَمَن يَتَّقِ ٱللَّهَ يَجْعَل لَّهُۥ مَخْرَجًا ۝٢ وَيَرْزُقْهُ مِنْ حَيْثُ لَا يَحْتَسِبُ »

*"எவர் அல்லாஹ்வுக்குப் பயந்து நடக்கின்றாரோ, அவருக்கு (அவரது விடயங்களில்) ஒரு நல்வழியை ஏற்படுத்திக் கொடுக்கின்றான். மேலும், அவர் அறியாத விதத்தில், அவருக்கு வாழ்க்கை வசதிகளை ஏற்படுத்திக் கொடுக்கின்றான்."*

*அத் - தலாக் (65 : 2, 3)*

மேலும் அல்குர்ஆன் கூறுகின்றது:

﴿ وَلَوْ أَنَّ أَهْلَ ٱلْقُرَىٰٓ ءَامَنُوا۟ وَٱتَّقَوْا۟ لَفَتَحْنَا عَلَيْهِم بَرَكَٰتٍ مِّنَ ٱلسَّمَآءِ وَٱلْأَرْضِ ﴾

*"அவ்வூர்களில் இருந்தவர்கள் விசுவாசங் கொண்டு (அல்லாஹ்வைப்) பயந்து நடந்திருந்தால், அவர்களுக்காக வானத்திலும், பூமியிலும் உள்ள பாக்கியங்களைத் திறந்து விட்டிருப்போம்."*

*அல் - அஃராப் (7 : 96)*

இதுபற்றி ஷெய்குல் இஸ்லாம், இமாம் இப்னு தைமியா அவர்கள் ஒருமுறை இவ்வாறு குறிப்பிட்டார்கள்.

*"உலகில் ஒரு சுவர்க்கப் பூங்கா உள்ளது. அதில் நுழையாதவர்கள் மறுஉலகின் சுவர்க்கப் பூங்காவிலும் நுழைய மாட்டார்கள்."*

*- நூல் : அல் வாபிலுஸ் ஸையிப்.*

## 5. ஷைத்தானின் (துஷ்டனின்) ஆக்கிரமிப்பிலிருந்து பாதுகாப்பு:

மனிதர்களைக் கெடுக்கக்கூடிய ஷைத்தான் என்பவன், ஒவ்வொருவர் உள்ளத்திலும் சந்தேகங்களையும், ஊசலாட்டங்களையும் ஏற்படுத்துகிறான். அவனது வலையில் சிக்கியவர்களை அழிவின்பால் இட்டுச் செல்கின்றான். இத்தகைய ஷைத்தானின் வலையில் சிக்காமல், தம்மைப் பாதுகாத்துக் கொள்வதற்கு முஃமீன்களுக்கு அல்லாஹ்தஆலா சில பாதுகாப்பு அரண்களை ஏற்படுத்திக் கொடுத்துள்ளான். அத்தோடு அந்த ஷைத்தானை அடித்துத் துரத்தி விடுவதற்கென்று விசுவாசிகளுக்கு சில பாதுகாப்பு ஆயுதங்களை வழங்கியுள்ளான். அதுபற்றி கீழ்வரும் வசனத்தில் விளக்குகின்றான்.

﴿ وَإِمَّا يَنزَغَنَّكَ مِنَ ٱلشَّيْطَٰنِ نَزْغٌ فَٱسْتَعِذْ بِٱللَّهِ إِنَّهُۥ هُوَ ٱلسَّمِيعُ ٱلْعَلِيمُ ﴾

*(நபியே!) ஷைத்தானுடைய யாதொரு ஊசலாட்டம் (தீய காரியங்களைச் செய்யும்படி) உம்மைத்தூண்டும் பட்சத்தில், உம்மை (அதிலிருந்து) இரட்சித்துக் கொள்ளும்படி அல்லாஹ்விடத்தில் நீர் கோருவீராக. நிச்சயமாக அவன் (யாவையும்) செவியுறுவோனும் நன்கறிவோனுமாக இருக்கிறான்."*

*புஸ்ஸிலத் (41 : 36)*

இந்த ஷைத்தானைப் பற்றி நபித்தோழர் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் இவ்வாறு குறிப்பிடுகின்றார்கள்:

*"ஷைத்தான் என்பவன் மனிதர்களின் உள்ளங்களை எப்போதும் ஆக்கிரமித்துக் கொள்ளக் கூடியவன். ஒரு கணமேனும் மனிதன் மறதி நிலையில் இருந்தால், உடனே அவனது உள்ளத்தில் ஷைத்தான் சந்தேகத்தையும், ஊசலாட்டத்தையும் ஏற்படுத்தி விடுவான். அவன் அல்லாஹ்வை ஞாபகப்படுத்தினால் உடனே அந்த ஷைத்தான் மறைந்து விடுவான்."*

ஆகவே, இஸ்லாமிய சோதரனே, உன்மீதுள்ள கடமைகளை சரிவர நிறைவேற்றியும், விலக்கப்பட்ட தீயவைகளிலிருந்து தூரமாகியும் இருப்பதன் மூலமே உனது ஈமானைப் பாதுகாத்துக்கொள்ள முடியும். நரக நெருப்பைப் பயந்து கொள்ளும்படி, உனக்கு உபதேசிக்கக் கூடிய நல்லடியார்களை நீ அடிக்கடி சந்தித்துக் கொள்வது நல்லது. அத்தகையோர் உனதுள்ளத்தில் சுவர்க்கத்தைப் பற்றிய ஆசையை ஏற்படுத்துவார்கள். உனது ஈமானையும் உள உறுதியையும் அதிகரிக்கச் செய்யும் விடயங்களை அவர்கள் உனக்கு ஞாபக மூட்டுவார்கள்.

அவ்வாறே, இறைவிசுவாசிகளை துன்புறுத்துவதிலிருந்து நீ உனது உறுப்புகளைப் பாதுகாத்துக்கொள். முஸ்லிம் சமூகம், எவரது நாவிலிருந்தும், கரங்களிலிருந்தும் அமைதிபெறுகின்றனரோ, அவரே உண்மை முஸ்லிம் என்பது நபிகளாரின் பொன் மொழியாகும். மேலும், இறைவிசுவாசிகள் எவரது அநீதிகளிலிருந்து பாதுகாப்புப் பெறுகின்றனரோ அவரே உண்மை முஃமினாவார். எனவே, பொறாமை, பெருமை, தற்புகழ்ச்சி போன்ற இழி குணங்களிலிருந்து உனதுள்ளத்தைத் தூய்மைப் படுத்திக்கொள்.

ஏனெனில் ஓர் உண்மை முஃமினிடத்தில் எப்போதும் எளிமை, பணிவு, நளினம் போன்ற நற்குணங்கள் இருந்து கொண்டிருக்கும். அவன்தான் விரும்புவதையே, தனது சகோதரர்களுக்கும் விரும்புவான். நின்ற நிலையிலும், அமர்ந்த நிலையிலும், படுத்த நிலையிலும் அல்லாஹ்வை

நினைவு கூர்ந்து, வானம், பூமி போன்ற அவனது படைப்புக்கள் பற்றி சதாவும் சிந்திக்கக் கூடியவர்களுடன் நீ எப்போதும் இருந்து கொள். அவர்கள், தம் இறைவனிடம் "எங்களது இறைவனே! நீ நிச்சயமாக இவற்றை வீணுக்காகப் படைக்கவில்லை. நீ மிக்க தூய்மையானவன். ஆகவே, நரக வேதனையிலிருந்து எம்மைப் பாதுகாப்பாயாக." என்று பிரார்த்திப்பார்கள்.

சொல்லிலும், செயலிலும் நீ மானக் கேடான முறையில் நடந்து கொள்ளாதே. ஏனெனில், இவை போன்றவைகளிலிருந்து வெட்கம் கொள்வது ஈமானில் ஒரு பகுதியாகும். உலகில் நீ முதலீடு செய்த நல்லமல்களுக்குரிய நற்கூலியும், லாபமும் கியாமநாளில் உனக்குக் கிடைக்கும். உனது எதிர்காலம் நல்லமுறையில் அமைவதற்கு உன் இறைவனிடம் அடிக்கடி பிரார்த்தித்துக்கொள். அதற்காக அவனிடமே உதவிதேடு. ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும் பின்வரும் பிரார்த்தனையை அவனிடம் கேட்டுக்கொள்.

*"அதாவது, என் இறைவனே, உன்னை நினைவு கூர்ந்து, உனக்கு நன்றியும் செலுத்தி, உன்னை நல்ல முறையில் வணங்குவதற்கு நீ எனக்கு உதவி புரிவாயாக."*

*- அபூதாவூத், அந் நஸாஈ.*

யா அல்லாஹ்! உனது திருப்பொருத்தத்தைப் பெறுவதற்குரிய வழிகளை எனக்கு இலகுபடுத்தி; உன்னை நல்லமுறையில் வணங்குவதற்கும், உன்னைப் பயந்து கொள்வதற்கும் எனக்கு உதவிபுரிவாயாக.

மேலும், உலகைவிட மேலானதாக மறுஉலகைத் தேர்ந்தெடுப்பவர்களில் ஒருவனாக என்னை ஆக்கி, ஈருலகிலும் எனக்கு நன்மையானவற்றையே அளித்து, மறுமையின் நரக நெருப்பை விட்டும் என்னைப் பாதுகாத்து விடுவாயாக.

இறுதியாக, ஸலவாத்தும் சலாமும் இறுதித் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் மீதும், அவர்களது தோழர்கள், வழித்தோன்றல்கள் அனைவர் மீதும் என்றென்றும் உண்டாவதாக!

******

ترجمة كتاب

# « الايمان »

## حقيقته - علاماته - ثمراته

المؤلف

الدكتور عبد الله بن محمد المطلق

ترجمة إلى اللغة التاملية

محمد الياس آدم

المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية
الجاليات - بالروضة

# أخي الكريم وأختي الكريمة

ندعوكم للمشاركة في إنجاح أعمال المكتب وتحقيق طموحاته من خلال إسهامكم بالأفكار والمقترحات والدعم المادي والمعنوي.

**فلا تحرم نفسك الأجر بالمشاركة في دعم أعمال المكتب**

## والدال على الخير كـ... فاعله

| م | إسم الحساب | رقم الحساب | غرض الحساب |
|---|---|---|---|
| ١ | التبرعات العامة | ١٩٥٦٠٨٠١٠١٠٢٠٠٧ | خاص بتسيير أعمال المكتب كمثل رواتب الدعاة والعاملين وخدمات أخرى |
| ٢ | تبرعات المكتب | ١٩٥٦٠٨٠١٠١٠٦٥٥٢ | خاص بطباعة الكتب والمطويات وغيرها |
| ٣ | تبرعات الزكاة | ١٩٥٦٠٨٠١٠١٠٨١٣٧ | خاص بأصناف الزكاة |
| ٤ | مقر المكتب | ١٩٥٦٠٨٠١٠١٣٣٥٥٦ | خاص بتشييد مباني المكتب |

الحساب الموحد مصرف الراجحي

المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بسلطانة
تحت إشراف وزارة الشؤون الإسلامية والأوقاف والدعوة والإرشاد
هاتف [illegible] الرياض ١١٤٦٢ بريد إلكتروني E.mail : Sultanah22@hotmail.com